

# உங்கள் மகளின் எதிர்கால வாழ்க்கைக்கு பொறுப்பு நீங்கள்

அவளது வருங்கால. முற்றிலும் சுகமான வாழ்க்கையை நிச்சயப்படுத்துவதற்கு இன்றே பணம் சேமிக்கத் தொடங்குங்கள்.

சேமிக்கவும் மற்றும் கரண்ட், ஸேவிங்ஸ், ஃபிக்ஸெட், ரெக்கரிங் டிபாஸிட்டுகள் ஆகிய கணக்கு தொடங்குவதற்கான எல்லாவித சௌகரியங்களையும் வழங்குகின்றோம்.




தலைமை அலுவலகம் : கல்கத்தா

UCO 1/73

# கல்கி

## பொருளடக்கம்

பிரமாதீச ஆனி 31 ★ ஜூலை 15, 1973

கல்கி

மலர் 32
இதழ் 50



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா
-- பாரதியார்

# சுறுசுறுப்பு தேவை

நாட்டில் நிலவும் தற்போதைய பொருளாதார நிலைமையையும், மக்களின் கவலைகளையும் பார்க்கும்போது, மத்திய அரசாங்கம் தனது செயலாற்றும் திறமையையும், சிந்தனைத் தெளிவையும் இழந்துவிட்டதோ என்று எண்ணும்படி இருக்கிறது.

அமோகமான அதிகார பலத்தை அளித்தால், பெருவாரியான கட்சி பலத்தை அளித்தால், மக்கள் முன்னேற்றத்துக்கும் மக்களின் சந்தோஷத்துக்கும் சுக வாழ்வுக்கும் வழி காண முடியும் என்று சென்ற தேர்தலுக்கு முன் கோரினார் ஸ்ரீமதி இந்திராகாந்தி. மக்கள் தயங்காமல் அவர் கோரிய படியே முழு அதிகாரத்தைக் காங்கிரசுக்கு அளித்தனர்.

என்ன பலன் கண்டார்கள்? அரசியல் துறையில், தமிழ்நாடு போன்ற ஒன்றிரண்டு மாநிலங்களில் தவிர, மற்றெல்லா இடங்களிலும் தமது ஆதிக்கத்தைப் பூரணமாக்கிக் கொண்டு விட்டார். மாநிலங்களில் கட்சித் தலைமைக்கு யாரை நியமிப்பது என்பது முதல், அமைச்சர்கள் யார் யார் இருக்க வேண்டும் என்பதுவரை, தம்முடைய இச்சையின்படியே நடைபெறுமாறு பார்த்துக் கொண்டு விட்டார். ஒவ்வொரு மாநிலக் காங்கிரஸ் கட்சியும் தான் மாமூலாகச் செய்ய வேண்டிய காரியங்களைக் கூடச் செய்யும் ஆற்றலை இழந்து, எல்லாவற்றுக்கும் புதுதில்லியின் உத்தரவையும் ஆலோசனைகளையும் எதிர்பார்க்க வேண்டிய நிலைமையில் இருக்கின்றது.

இப்படிப் பல மாநிலங்களைச் செயல் இழக்கச் செய்துவிட்டதற்குப் பிரதியாக, அல்லது அதற்குப் பரிகாரமாக, மத்திய அரசு அபாரத் திறமையுடனே, சுறுசுறுப்புடனே செயல்பட்டு, நாட்டின் பல பிரச்னைகளைச் சமாளித்து, முன்னேற்றத்துக்கு வழிவகை செய்திருந்தால், மக்கள் சந்தோஷப்படக் கூடும். ஆனால், மாநிலங்களில் காணப்படும் செயலிழந்து போகும் தன்மை, மத்திய அரசையும் நன்றாகப் பிடித்திருக்கிறது. செயலில் சுறுசுறுப்பு தேவைப்படும் இடங்களில் மந்த நிலையே காணப்படுகிறது.

மக்களின் கஷ்டங்கள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே போகின்றன. அவசியமான எல்லாப் பண்டங்களுக்கும் விலைகள் கட்டுக்கடங்காமல் ஏறிக்கொண்டு போகின்றன. வேலைவாய்ப்பும் குறைந்து கொண்டு வருகிறது. தொழில்களில் உற்பத்தி குறைந்து கொண்டு வருகிறது. மின்விசைத் தட்டுப்பாட்டின் முழு விளைவை மக்கள் விலை உயர்வின் மூலமும் இதரவிதங்களிலும் உணர்ந்து சிரமப்படுகின்றனர். எங்கும் எல்லாப் பொருள்களுக்கும் பற்றாக்குறை! பணத்தின் மதிப்புக் குறைந்து கஷ்டத்தை அதிகமாக்குகிறது. உணவு தானிய வர்த்தகத்தை அரசாங்கம் எடுத்துக் கொள்வதுபோன்ற நடவடிக்கைகள் தவறு என்று சுட்டிக் காட்டக்கூடியவர்கள் அரசாங்கத்தில் இப்போது இல்லை! அதன் விளைவை நாடு அனுபவித்துக் கொண்டு வருகிறது. ஏக கட்சி ஏகாதிபத்தியத்தின் கோர தாண்டவத்தை நாடு பார்த்துக் கொண்டிருக்கிறது. பொறுப்புள்ள அமைச்சர்களோ என்ன செய்ய வேண்டும் என்று திண்ணைப் பேச்சு பேசுவதுபோல, தத்துவங்கள் கூறுகிறார்களே தவிர, நிலைமையைச் சமாளிக்க வேண்டிய பிரத்யக்ஷ சிந்தனைத் தெளிவோ, நடவடிக்கை எடுக்கும் தைரியமோ அவர்களுக்கு இருப்பதாகத் தெரியவில்லை.

இத்தகைய நிலைமையைச் சமாளிக்கக் கூடிய திறமை வாய்ந்த ஆலோசகர்களோ, அமைச்சர்களோ மத்திய அரசாங்கத்தில் ஒருவருமே இல்லையோ, அல்லது அவர்களும்கூடச் செயலிழந்து ஸ்தம்பித்த நிலைக்கு வந்து விட்டார்களோ என்று ஐயப்படவே தோன்றுகிறது.

திட்டக் கமிஷனுக்கு பிரத்யக்ஷ உணர்வை உணர்த்துவதும், பொருளாதாரத்தைச் சீர்ப்படுத்த சுறுசுறுப்பான நடவடிக்கைகள் எடுப்பதும் இன்றைய அவசரத் தேவை. இதற்குப் பொருளாதாரத் துறையில் சிந்தனைத் தெளிவும், நாட்டுப்பற்றும் செயல்திறனும் உள்ள ஆலோசகர்களாக அமைத்து, அவர்கள் உதவியைக் கொண்டு, தவறான கொள்கைகளைத் திருத்திக் கொள்ளும் துணிவு பிரதமருக்கு ஏற்படவேண்டும்.


குத்து....
சும்மாக் குத்து விடு!
நான் இருக்கேன் அண்ணே!
ஈரான்
பாக்
இந்திய எதிர்ப்பு வெறி


பழைய படி
உடம்பு துள்ளுது
மாதிரி இருக்கு!
இந்தியா


அரிசி
மொத்த
வர்த்தகம்


என்னைத் தள்ளாதீங்க!
பொறுங்க! முன்னெ
அந்தக் கூட்டிலே
பட்ட கடி எனக்குத்தானே
தெரியும்!
போங்க
தைரியமா!
கோதுமை
தேசிய
மயக்
பக்ருதீன்
அலி.
அகமத்
காங்கிரஸ்

# தமிழ் நாட்டிலே... தீரன்

## மேம்பாலத் திறப்பு விழாவில்

ஜூலை முதல் தேதி சென்னை நகரில் ஜெமினி அருகே திறந்து வைக்கப்பட்ட புதிய மேம்பாலத் (ஃப்ளை ஓவர்) திறப்பு விழாவில் நகரத் தந்தையாகிய மாநகராட்சி மேயருக்கு உரிய மரியாதை அளிக்கப்படவில்லை என்று குறை கூறப்படுவது ஒருபுறமிருக்க இந்த மேம்பாலத் திறப்பு விழாவின்போது நகரிலுள்ள வேறு பாலங்கள் சிலவற்றின் பெயர்கள் மாற்றி அழைக்கப்படும் என்று முதல்வர் அறிவித்திருக்கிறார்.

முதல்வரின் பெயர் மாற்றத் திட்டத்தில் சிக்கிய பாலங்களின் பெயர்ப் பட்டியல் வருமாறு: 1. சைதாப்பேட்டையிலுள்ள மார்மலாங் பாலம், 2. அடையாறு பாலம், 3. வாலாஜா பாலம். 4. வெலிங்டன் பாலம். 5. ஹாமில்டன் பாலம், 6. மன்ரோ பாலம்.

நகரின் பாலங்கள் தெருக்களின் பெயரை மாற்றும் அதிகாரம் மாநகராட்சிக்கு இருக்கும்போது, யாரையும் கேட்காமல் மாநகராட்சியின் ஒப்புதலையும் அடையாமல் முதல்வர் தாமாகவே நினைத்து முடிவு செய்து பொதுக் கூட்டத்தில் அறிவித்தும் விட்டார். இதற்குச் சென்னை மாநகராட்சி உறுப்பினர்கள் சிலர் ஆட்சேபணை செய்திருக்கின்றனர். மாநில சுயாட்சிக் கோரிக்கை மூலம் மாநிலத்துக்கு அதிகமான அதிகாரங்களைக் கோரும் முதல்வர் நகரசபைகளிடமிருந்து அவற்றுக்கு இருக்கும் சில அதிகாரங்களையும் பறிக்க முயல்வது ஏனென்று தெரியவில்லை.

மேலும் முக்கிய ரஸ்தாக்கள், பாலங்கள் இவற்றின் பழங் காலத்திய பெயர்களுக்குச் சரித்திர முக்கியத்துவம் உண்டு. இந்தப் பெயர்கள் நமக்குப் பிடித்தமான சரித்திரத்தை நினைவூட்டுகின்றனவா அல்லது பிடிக்காத சரித்திரத்தையா என்பதுகூட முக்கியமில்லை. அவை சரித்திரப் பெயர்கள் என்பதே முக்கியம்தான். நமக்கு அவை சுட்டும் சரித்திரம் பிடிக்கவில்லை என்பதற்காகவோ தெரியவில்லை என்பதற்காகவோ நினைத்தபடியெல்லாம் பெயர்களை மாற்றிக்கொண்டிருப்பது சரியில்லை.

## பிளாக் மார்க்கெட்டில் மின்சாரம்

''தமிழ்நாட்டில் மின்சார விநியோகத்தில் ஊழலும் முறைகேடும் இருப்பதாக''க் குற்றம் சாட்டி இந்த விஷயம்பற்றி 'எகனாமிக் டைம்ஸ்' பத்திரிகையில் வந்துள்ள கட்டுரை சில விவரங்களைச் சுட்டிக் காட்டியிருக்கிறது.

''தமிழ்நாட்டில் தொழிற்சாலைகள், விவசாயம் முதலிய உபயோகங்களுக்காகப் பொதுவில் தேவையான மின்சாரம் 1400 மெகாவாட் என்று அதிகாரபூர்வமான புள்ளி விவரங்கள் கூறுகின்றன. மின்சார வெட்டுக்குப் பின்னால் கிடைக்கும் மொத்த மின் விசையின் அளவு 900 மெகாவாட் எனக் கணக்கிடப்படுகிறது. இதில் அனல் மின் விசை 600 மெகாவாட். 200 மெகாவாட் நீர் மின்விசை. 100 மெகாவாட் கேரள மைசூர் மாநிலங்கள் உதவுகின்ற மின் விசை ஆகும். இது உண்மையாயிருக்கும்பட்சத்தில் தமிழகத்தில் 36 சதவிகித மின்வெட்டைத்தான் அமுல் நடத்த வேண்டியிருக்கும். 75 சதவிகித மின்சார வெட்டுக்கு அவசியமே இல்லை. மின்சார வெட்டு அமலில் இருக்கும்போதே ஜெனரேட்டர்களை நிறுவிச் சில தொழிற்சாலைகள் வழக்கமான உற்பத்தியைச் செய்தன. தமிழ்நாட்டில் இப்படி இந்தக் கால எல்லைக்குள் எத்தனை எத்தனை ஜெனரேட்டர்கள் வாங்கப்பட்டன என்பதற்கு விவரங்கள் இல்லை. பல தொழிற்சாலைகளில் உற்பத்திப் பணி சாத்தியமாவதற்கு ஜெனரேட்டர்கள் வாங்கியதுதான் காரணமா அல்லது மின்சாரத்தை முறைகேடான வழிகளிலே அடைந்து உபயோகப்படுத்தியது காரணமா என்ற சந்தேகம் எழுவதால் ஒரு முழு விசாரணையில்தான் உண்மை வெளிப்படும்.''

இவ்வாறு அந்தப் பத்திரிகையில் வெளிவந்துள்ள விவரங்களைக் கொண்டு இதுபற்றி விசாரித்தறிய ஓர் உயர்மட்ட விசாரணைக் குழுவை நியமிக்கக் கோரும் தீர்மானம் ஒன்றைத் தமிழ்நாடு இந்திரா காங்கிரஸ் நிர்வாகக்குழு நிறைவேற்றியிருக்கிறது.

## கைரிக்ஷாக்காரர் தவிப்பு

முதலமைச்சரின் சைக்கிள் ரிக்ஷா வழங்கும் திட்டத்தால் சுமார் ஐந்நூறுக்கும் மேற்பட்ட ரிக்ஷாக்காரர்கள் திண்டாடித் தெருவில் நிற்க நேர்ந்திருக்கிறது. 'பழைய கையிழுப்பு ரிக்ஷாக்களையும் போலீஸ் கமிஷனர் அலுவலகத்தில் ஒப்படைத்தாயிற்று. புதியதாகச் சைக்கிள் ரிக்ஷாக்களும் தரப்படவில்லை' என்ற நிலையில் தவிப்பவர்களைப் பற்றிப் பத்திரிகைகளில் செய்திகள் வெளிவந்திருக்கின்றன. கைரிக்ஷாக்களை ஒப்படைத்துவிட வேண்டும் என்று வற்புறுத்தப்பட்டபோது நகரில் 1240 கைரிக்ஷாக்கள் போலீஸ் கமிஷனர் அலுவலகத்தில் ஒப்படைக்கப்பட்டன. இவற்றில் 707 ரிக்ஷாக்கள் மட்டுமே லைசென்ஸ் தகடுகள் உள்ளவை. இந்த லைசென்ஸ் உள்ளவற்றுக்கு மட்டுமே முதலில் சைக்கிள் ரிக்ஷாக்கள் வழங்கப்படும் என்று அறிவித்து முதல்வரின் பிறந்த நாளன்று 300 பேர்களுக்கு மட்டுமே ரிக்ஷா வழங்கினார்கள். மேற்கொண்டு அடுத்தடுத்து 120 பேர்களுக்கும் வழங்க ஏற்பாடாகி விட்டது. எஞ்சி 287 பேர்களுக்குப் பட்டறையில் புதிய சைக்கிள் ரிக்ஷாக்கள் தயாரானதும் தரப்படுமாம். அதுவரை நாள் ஒன்றுக்கு அவர்களுக்கு இரண்டு ரூபாய் உதவித் தொகையாகத் தரப்படும் என்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது.

இந்தக் கணக்கில் எஞ்சியிருக்கும் 533 கைரிக்ஷாக்காரர்கள் வேலையும் இல்லாமல்

உதவித் தொகையும் கிடைக்காமல் திண்டாட நேர்ந்திருக்கிறது. ஒப்படைக்கப்பட்ட ரைபிக்ஷாவுக்குத் தந்த இருநூறு ரூபாயை வைத்து எவ்வளவு நாள் காலந் தள்ளுவது என்று தெரியாமல் இந்த 533 பேர் கலங்கிக் கண்ணீர் சிந்துகின்றனர்.

## இலாகா மாற்ற நாடகம்

திண்டுக்கல் தேர்தல் முடிவு வெளிவந்தவுடன் 'கட்சிப் பணிக்காகப் பதவி விலகிட மந்திரிகள் தயார் தயார்' என்று தி.மு.க. பொதுக் குழுவில் முழங்கினார் முதல்வர். 'ஒரே தி.மு.க. நபர் பல பதவிகளை வகிப்பது தவிர்க்கப்படும்'- என்றார். கடைசியில் எல்லாமே 'ஸ்டண்ட்' என்று ஆகிவிட்டது. யாரும் கட்சிப் பணிக்காக மந்திரி பதவியை விட முன்வரவில்லை. மேடைகளிலும், பொதுக் குழுவிலும் முழங்கி விட்டதனால் பரிகச் சீட்டுக் குலுக்கல் போல் மந்திரிகளின் இலாகாக்களை ஒரு குலுக்கல் குலுக்கி மாற்றி அறிவித்து விட்டு முதல்வரால் நிம்மதியாகப் பெருமூச்சு விட்டுக் கொள்ள முடிந்திருக்கிறது. ஆனால் மக்களால் அப்படி இருக்க முடியாது. ஊழல் அரசாகிய தி.மு.க. அரசை இப்படி வெறும் இலாகா மாறுதல்களைப் பார்த்து ஏமாந்து மன்னித்து விடத் தமிழ் மக்களில் எந்தப் பிரிவினரும் இன்று தயாராயில்லை. இந்த இலாகா மாறுதல்களால் மட்டும் யாருக்கும் எந்த நன்மையும் வந்து விடப் போவதில்லை என்பதை மக்கள் நன்றாகப் புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

## 20 ஆசிரியர்கள் 60 ஆயிரம்

முன்னாள் முதல்வர் திரு பக்தவத்சலம் ஜூலை மாத முதல் வாரம் நெய்வேலியில் காங்கிரஸ் ஊழியர்களிடையே பேசுகையில் கேட்பவர்களைத் திடுக்கிட



# காலத்தை வெல்ல வேண்டும்!

பொதுநலமே தவமாக வளர்ந்துயர்ந்த
புதுயுகத்துப் பெருமுனிவர்
எதுநலமோ அதைஎல்லாம் செய்தளித்தே
இந்நாட்டை வளமாக்கி
விதிநலியப் பாடுபடும் மாவீரர்
விருதுநகர் தந்தபெரும்
மதியூகி காந்திபக்தர் நேருதாசர்
மக்களெல்லாம் கொண்டாடும்

ராமராஜ்யம் வரவேண்டி உழைக்கின்ற
நாடறிந்த பெருந்தலைவர்
ஊமைராஜ்யம் நடக்கின்ற காலத்தும்
உறுதியுடன் குரலெழுப்பிச்
சேமராஜ்யம் வேண்டுமெனத் தொண்டுசெயுட
தெளிவான சமதர்மக் காவலாளி
காமராஜர் பல்லாண்டு வாழ வேண்டும்
காலத்தை வெல்ல வேண்டும்

எழுபத்தொன் றெனும் அகவை அடைகின்றார்
இன்னும் மிகஇன்னும்
பழுதற்றபல் லாண்டுகளாய் வாழவேண்டும்
பாரதத்தைக் காக்கவேண்டும்
தொழுதுற்ற பணிசெய்யக் காத்திருக்கும்
தொண்டர் உளம்மகிழ
எழுதரிய பொதுவாழ்வின் இலக்கணமாய்
இங்குநீடூழி வாழவேண்டும்!

- நா. பார்த்தசாரதி

## ராஜாஜி சிந்தனை

கடலில் திசை காட்டும் துருவ முள்ளைச் சரியாக வைத்துக் கொண்டிருக்கும் வரையில் கப்பலுக்கு அபாயமில்லை. காந்த முள் எப்போதும் துருவத்தை நோக்குவதைப் போல் நம்முடைய மனம் இடைவிடாமல் ஆண்டவனை நோக்கியே நின்றால் வாழ்க்கை என்னும் கப்பல் கரையைப் போய்ச் சேரும். பயமில்லை.

★

**உலக வாழ்க்கையில் நாம் செய்ய வேண்டியதாக ஏற்படும் வேலைகளில் ஒரு வேலை உயர்ந்தது, ஒரு வேலை தாழ்ந்தது என்றில்லை. எந்த வேலையும் ஒன்றே; வித்தியாசமில்லை.**

★

சுயசரிதங்கள் எல்லோருமே எழுதுகிறார்கள். ஆனால் நல்ல விஷயங்களை மட்டும் பொறுக்கி எழுதிவிட்டு ஆகாத விஷயங்களைச் சரிப்படுத்தியும் மறைத்துவிட்டும் எழுதுகிறார்கள். உண்மையை முற்றிலும் எழுத ஆரம்பித்தால் எத்தனை மகா பாபச் செயல்களைச் செய்ய எண்ணினோம், அதைப் பகவான் எப்படியோ தடுத்து நம்மைப் பாபத்தினின்றும் தப்புவித்தான் என்பதை எல்லோருடைய வாழ்க்கைச் சரித்திரத்திலும் காணலாம்.

★

**புகழுக்காகப் பக்தியும் பூஜையும் செய்பவனுடைய பக்தியும் பூஜையும் உண்மைப் பக்தி அல்ல; உண்மைப் பூஜையும் அல்ல. மௌனமும் தனிமையுமான பக்தியே பக்தி.**

★

வண்ணான் வீட்டிலிருந்து வந்த புதுத் துணிக்கு எந்தச் சாயமும் ஏற்றிவிட முடியும். அந்தத் துணியைப் போன்றதுதான் மனமும். நல்ல சகவாசமும் முயற்சியும் இருந்தால் அதை நல்வழிக்குத் திருப்பலாம்.

வைக்கும் ஒரு லஞ்ச ஊழல் பற்றிப் பிரஸ்தாபித்திருக்கிறார். ஒரு பஞ்சாயத்து யூனியனில் பணிபுரியும் ஆசிரியர்களிடம் அந்த வேலைக்கான நியமனத்தை அளிப்பதற்காக ரூபாய் 60 ஆயிரம் வரை லஞ்சம் வாங்கியதாகத் தம்மிடம் தெரிவிக்கப்பட்டதாக அவர் கூறியிருக்கிறார். ''சம்பாதித்தவர்கள் ரூ. 60 ஆயிரத்தை மிகவும் சுலபமாகக் கேட்டுச் சம்பாதித்து விட்டதாக நினைக்கலாம். ஆனால் 20 ஏழை ஆசிரியர்கள் தலைக்கு ரூ. 3000 வீதம் இந்தக் தொகையைச் சேர்த்துக் கொடுப்பதற்கு எவ்வளவு சிரமப்பட்டிருப்பார்கள் என்பதை நினைத்தால் மிகவும் வருத்தமாக இருக்கிறது'' என்று இரு பக்தவத்சலம் கூறியுள்ளார்.

### முற்பகல் செய்யின்.....

இந்திய அரசியலில் தாங்கள் இரண்டாக உடைந்த பின் மற்ற எல்லா அரசியல் கட்சியிலும் ஊடுருவி அல்லது ஊடுருவாமலே அவற்றையும் இரண்டிரண்டாக உடைத்து விட்டுக் குழப்பத்தில் மீன் பிடிப்பதையே தொழிலாகக் கொண்டிருந்த வலதுசாரிக் கம்யூனிஸ்டுக் கட்சி தமிழ்நாட்டில் தானே இரண்டாக உடைகிற நிலைக்கு வந்துவிட்டது இப்போது. அந்தக் கட்சியின் தமிழ்நாட்டு மாநிலச் செயலாளர் திரு கல்யாண சுந்தரத்தின் சுயநலத்தையும், தம் கைகளை மட்டும் வலுப்படுத்திக் கொள்ள அவர் கட்சியில் கையாண்டு வரும் தந்திரங்களையும் எதிர்த்து வலது கம்யூனிஸ்ட் சட்டமன்ற உறுப்பினரான திரு மணலி கந்தசாமி தனியே விலகி வேறு ஒரு கட்சி தொடங்கக்கூடும் என்று தெரிகிறது. இதுவரை வேறு கட்சிகளைக் கூறு போட்டு வந்த வலதுசாரிக் கம்யூனிஸ்டுகள் இப்போது தமிழ்நாட்டில் தாங்களே சிதறிக் கொண்டிருக்கிறார்கள். 'முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்'— என்ற பழமொழி இவர்களுக்கு இப்போது பொருந்துகிறது.

### நடைபாதை மன்றங்கள்

சென்னை திருவல்லிக்கேணி வெங்கட்ரங்கம் பிள்ளை தெருவில் இம்மாத முதல் வாரம் ஏற்பட்ட 'கட்சிக் கொடியேற்றம்' சம்பந்தமான ஒரு கலகத்தின் காரணமாக நகரின் நடைபாதைகளுக்கு விடிவு பிறந்திருக்கிறது. போலீஸ் கமிஷனர், மாநகராட்சி கமிஷனர், அரசியல் கட்சித் தலைவர்கள் எல்லாருமாகக் கலந்து பேசி நடைபாதைகளில் உள்ள கொடிகள், கட்சித் மன்றங்கள், மேடைகள் ஆகியவற்றை நீக்குவது பற்றி ஓர் ஏற்பாட்டுக்கு இசைந்திருக்கிறார்கள். இந்த நடைபாதை மன்றங்களும், கொடி மேடைகளும், போக்குவரத்துக்கும், பாதசாரிகளுக்கும் பெரிய இடையூறாக இருப்பது தவிர அடிக்கடி கட்சிப் பிரதி கட்சிச் சண்டைகளுக்கும், கலகங்களுக்கும் காரணமாயிருப்பதாகத் தெரிகிறது. பேச்சு வார்த்தைகளால் நற்பயன் விளைந்தால் நல்லதுதான்.



நன்ருகப் பட்டை தீட்டிய வைரத்தை எந்தப் பக்கம் திருப்பினாலும் ஜ்வலிக்கும். மாந்தர்களுள் பட்டை தீட்டிய வைரம் போல் பளிச்சிடுபவர் தமிழ் நாட்டைச் சேர்ந்த, தமிழன்னை ஈன்றளித்த பெருமகனார் திரு ஆர். வேங்கடராமன். காங்கிரஸ் தொண்டராக இருந்தாலும், தொழில் சங்கத் தலைவராகத் திகழ்ந்தாலும், அமைச்சராக அரும் பணியாற்றினாலும், நாட்டுக்கே திட்டம் தீட்டும் பேராற்றல் தேவைப்படும் உயர் பதவி வகித்தாலும், உலக அரங்க மேடைகளில் இந்தியாவின் பண்பட்ட பிரதிநிதி என்ற முறையில் தூதுவரெனப் பணி புரிந்தாலும் அல்லது அறப் பணியைத் திருப்பணி எனக் கருதிச் செயல் புரிந்தாலும் திரு ஆர். வேங்கடராமன் பளிச்சிட்டு மின்னும் ஒப்பற்ற செயல் வீரர். கருத்துத் தெளிவும், சிந்தனை உயர்வும், செயல் திறமையும் எச்செயல் புரிந்தாலும் சமூக நலனையும், நாட்டு நலனையுமே முதன்மையாகக் கருதும் மனோபாவமும் திரு ஆர். வேங்கடராமனுடைய பெருமைக் குணாதிசயங்கள்.

காங்கிரஸ் ஆட்சி தமிழ் மாநிலத்தில் நிகழ்ந்தபோது தொழில்துறை அமைச்சராக திரு வேங்கடராமன் பணியாற்றியது நாம் அறிந்ததே.

சென்னை மாநிலத்தைத் தொழில்மயமாக ஆக்க அவர் எடுத்துக் கொண்ட முயற்சியும், அதில் அவர் கண்ட வெற்றியும் நமக்குப் பெருமை தருபவை. புதுத் தொழில்களைத் தொடங்கி வைப்பதில் நாளுக்கொரு தொழிற் சாலை என்று அவர் நிகழ்த்திய அற்புதத்தைப் போலவே இயங்கிக் கொண்டிருக்கும் தொழில்களின் இன்னல்களைத் தீர்த்து வைப்பதிலும் அவர் அபாரத் திறமை பெற்றிருந்தார். அயல்நாட்டுத் தொழில் நுட்பக் கூட்டுறவை, அயல்நாடுகளுக்குப் பிரயாணம் செய்யும்போதெல்லாம் தேடித் தரும் பணியைத் தம்முடைய சிறப்புப் பணி எனச் செய்தார்.

தனியார்த்துறைத் தொழிலதிபர்களே திரு வேங்கடராமனைத் தங்களது நண்பர்களில் முதல் நண்பர் என்று கருதி வந்தனர். அந்த அளவுக்கு அவர்களுடைய நன்மதிப்பை அவர் பெற்றிருக்கிறார்.

திட்டக் கமிஷனில் அங்கத்தினராகப் பணியாற்றிய குறுகிய காலத்தில், அந்த மகாசமுத்திரத்தில் நிலவிய குழப்பங்கள், பேரலைகள், சிக்கல்கள், சுழற்காற்றுகளுக்கிடையில் கருத்துத் தெளிவுடன், உருப்படியான பல ஆலோசனைகளைச் சொல்லியிருக்கிறார். மாவட்டத்துக்கு ஓர் அனல் மின் நிலையம் அமைக்க வேண்டும் என்று அவர் பல ஆண்டுகளுக்கு முன் கூறிய ஆலோசனையை முழுமையாக நிறைவேற்ற முடியாது போனாலும் செயல்படுத்த ஆரம்பித்திருந்தால்கூட, இப்போது தமிழ்நாடு அநுபவித்துக் கொண்டிருக்கும் மின்சப்ளை நெருக்கடி ஏற்பட்டிராது.

## அறப் பணியில் ஒரு ரத்தினம்

புதுதில்லியில் ஒரு குன்றின் மீது தமிழ் நாட்டில் உள்ளது போலவே ஸ்ரீ ஸ்வாமிநாத ஸ்வாமிக்கு ஓர் ஆலயம் எழுப்பி, தக்ஷிண ஸ்வாமி மலைக்கு உத்தர ஸ்வாமி மலை ஒன்று நிர்மாணம் செய்த அறப் பணி அரியதொரு பணி. அரசாங்கப் பதவிகளில் இருந்து ஆற்றிய பணிகளைவிட அரும்பெரும் காரியம். இந்த மகத்தான கைங்கரியத்தைத் திட்டமிட்டு, அதை நிறைவேற்றக் குழு அமைத்து, நிதி திரட்டி, ஸ்ரீ காஞ்சி பரமாச்சாரியாளின் அனுக்கிரஹத்தையும், ஆக்ஞையையும் பெற்று, செயலாற்றியுள்ளார் திரு ஆர். வி. பெரியவாளின் விருப்பப்படி, ஆலய, கோபுர கட்டட வேலைகள் யாவற்றையும் ஒழுங்கு செய்தார். இம்மகத்தான காரியத்தை நிறைவேற்ற எவ்வளவு ஆர்வம், மனோதிடம், செய்திறன், ஆசார்ய பக்தி, தர்மத்தில் அசையாத நம்பிக்கை வேண்டும். அவரது அறப் பணியைப் பாராட்டி அவருக்கு 'ஸத்சேவா ரத்னம்' என்ற விருதை ஸ்ரீ காஞ்சிப் புதுப் பெரியவாள் தமது புனித கரங்களாலே வழங்கி ஆசீர்வதித்து அருளினார்கள். ஆர். வி. என்னும் நவரத்னங்களைக் கொண்ட ஆபரணத்தில் ''ஸத் சேவா ரத்தினம்'' மையத்தில் எடுப்பாக இருந்து ஜொலிக்கிறது.

தில்லிவாழ் தமிழ் மக்களின் பெருமையும் குன்றின்மேல் ஏற்றின விளக்கைப்போல் பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

---

**''ஸத் விஷயங்களில் தங்களது பற்றுதல், பரோபகார சிந்தை, ஆலய நிர்மாணம் முதலிய தெய்வீக கைங்கரியங்களில் சிறப்பான சிரத்தை ஆகியவற்றை அறிந்து, உள்ளம் மகிழ்ந்து, தங்களுக்கு 'ஸத் ஸேவாரத்னம்' என்ற விருதினைச் சூட்டுகிறோம்'' என்று ஸ்ரீ ஆர். வேங்கடராமனுக்கு அருளாசி கூறும் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் விருதுப் பத்திரத்தை எதிர்ப் பக்கத்தில் காணலாம். 'ஸத் ஸேவாரத்தினத்'தை இவ்விதழ், மேலட்டையில் தாங்கி வருகிறது.**

॥ श्रीचन्द्रमौलीश्वर ॥



स्वस्ति श्रीमदखिल भूमण्डलालङ्कार त्रयस्त्रिंशत्कोटि देवतासेवित-श्रीकामाक्षीदेवीसनाथ श्रीमदेकाम्रनाथ श्रीमहादेवीसनाथ श्रीहस्तिगिरिनाथ-साक्षात्कार परमाधिष्ठान सत्यव्रतनामाङ्कित काञ्चीदिव्यक्षेत्रे शारदामठ-सुस्थितानाम् अतुलितसुधारसमाधुर्य कमलासनकामिनीधम्मिल्लसम्फुल्ल-मल्लिकामालिकानिष्यन्द मकरन्दझरीसौवस्तिक वाङ्निगुम्भविजृम्भणानन्द-तुन्दिलितमनीषिमण्डलानाम् अनवरताद्वैतविद्याविनोदरसिकानाम् निरन्तरालङ्कृतीकृतशान्तिदान्तिभूम्नाम् सकलभुवनचक्र प्रतिष्ठापक श्रीचक्र-प्रतिष्ठाविख्यातयशोऽलङ्कृतानाम् निखिलपाषण्डषण्डकण्टकोत्पाटनेन विशदीकृतवेदवेदान्तमार्ग षण्मतप्रतिष्ठापकाचार्याणां श्रीमत्परमहंस-परिव्राजकाचार्यवर्य श्रीजगद्गुरु श्रीमच्छङ्करभगवत्पादाचार्याणाम् अधिष्ठाने सिंहासनाभिषिक्त श्रीमन्महादेवेन्द्रसरस्वती संयमीन्द्राणाम् अन्तेवासिवर्य-श्रीमच्चन्द्रशेखरेन्द्रसरस्वतीश्रीपादादेशानुसारेण श्रीमज्जयेन्द्रसरस्वती श्रीपादैः

[illegible] ग्रामनिवासि [illegible] कुमाराय
श्री वेङ्कटरामार्याय क्रियते नारायणस्मृतिः।

अथ च सद्विषयेषु आसक्तिम्, परोपकार-चिन्तनम्, विशेष्य आलयनिर्माणादि दैविक-कैङ्कर्येषु श्रद्धां च विज्ञाय मुदितस्वान्ता वयं भवन्तं 'सत्कैङ्कर्यरत्नम्' इति बिरुदेन सभाजयामः।

आज्ञापनम्
उत्तरस्वामिमलै [illegible]
[illegible]

नारायणस्मृतिः

# வியாச பூஜை

இன்று வைதிக மதம் என்று ஒன்று இருக்கிறதென்றால் அதற்குக் காரணபுருஷர் வியாஸ மகரிஷிதான். அவருடைய காலம் வரையில் வேதத்தில் எண்ணிலாத கிளைகள் இருந்தன. கலியுக ஜனங்களுக்கு அத்தனையையும் அத்தியயனம் செய்யச் சக்தி போதாது என்று திரிகால ஞானியான வியாஸர் உணர்ந்தார். எனவே, வேதத்தை இப்போதிருப்பதுபோல் ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வம் என்று நாலாகப் பிரித்தார். இதனால்தான் அவருக்கு 'வேத வியாஸர்' என்ற பெயர் உண்டாயிற்று. அவருடைய இயற்பெயர் 'கிருஷ்ணர்' என்பதே. அவர் தீவில் பிறந்தவர். தீவுக்கு 'த்வீபம்' என்று ஸம்ஸ்கிருதத்தில் பெயர். த்வீபத்தில் பிறந்த கிருஷ்ணரானபடியால் அவருக்கு 'கிருஷ்ண த்வைபாயனர்' என்று பெயர். 'கிருஷ்ண' என்றால் ஸ்யாமள நிறமானவர் என்று வைத்துக் கொள்ளலாம். உண்மையில் அவர் கிருஷ்ண பரமாத்மாவுக்கு வேறுபட்டவர் இல்லை. 'முனிவர்களில் நான் வியாஸர்' என்று பகவானே கீதையில் சொல்கிறார். 'வியாஸாய விஷ்ணு ரூபாய, வியாஸ ரூபாய விஷ்ணவே' என்று ஸஹஸ்ரநாமத்தின் பூர்வ பாகத்தில் சொல்கிறோமல்லவா?

வேதங்களை நான்காக விபாகம் செய்து ஸுமந்து, ஜைமினி, பைலர், வைசம்பாயனர் என்ற நாலு சீடர் மூலம் ஒவ்வொரு வேதத்தைப் பிரசாரப் படுத்தியவர் வியாஸ பகவான். பிறகு பொதுஜனங்கள் சகலருக்காகவும், வேத தாத்பரியங்களை கதாரூபமாக உருவெடுத்த மகாபாரதத்தை லோகத்துக்குத் தந்து பரம உபகாரம் செய்தவரும்



இதே வியாஸர்தான். நாலு வேதங்களுக்குப் பிறகு எழுதப்பட்டதால் மகாபாரதம் 'பஞ்சமோ வேத.' — ஐந்தாவது வேதம் — என்று சிறப்பிக்கப்படுகிறது. வேதத்தில் நுணுக்கமாக இருக்கிற சத்தியங்களைப் பூதக்கண்ணாடியால் காட்டுவதுபோல் எல்லா மக்களுக்கும் புரிய வைப்பதற்காக ஸ்காந்தம், பாகவதம் முதலிய பதினெட்டுப் புராணங்களைத் தந்தவரும் வியாஸ பகவான்தான். இப்போது அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம், சைவ சித்தாந்தம் என்றெல்லாம் வைதிக மதத்தில் பிரிவுகள் உள்ளன அல்லவா? இவை எல்லாவற்றுக்கும் முக்கியமான மூன்று ஆதாரங்களில் ஒன்று பிரம்ம சூத்திரம். இந்த பிரம்மசூத்திரத்தை அருளிய பாதராயணரும் ஸாக்ஷாத் வியாஸரே.

இப்படி நமக்கெல்லாம் பிரமிப்பூட்டுகிற விதத்தில் வைதிக தர்மத்துக்குப் பல விதங்களில் உறுதி தந்து ஆதார ஸ்தம்பம்போல் நிற்கிறவர் ஸ்ரீவேத வியாஸ மஹரிஷி. அவர் ஒருத்தர் இல்லாவிட்டால் நம் மதமே இல்லை. அந்த மகாபுருஷரை ஹிந்துவாகப் பிறந்த ஒவ்வொருவனும் ஸ்மரிக்க வேண்டும்; நமஸ்கரிக்க வேண்டும்; அவர் விக்கிரகத்தை, சித்திரத்தைச் சிவிகையில் வைத்துத் தோளில் சுமக்க வேண்டும். நமக்கு சாச்வத சௌக்கியத்துக்கான வழியைக் காட்டிக் கொடுத்திருக்கிற வேத வியாஸருக்கு நம் நன்றியைக் காட்டக் கடமைப்பட்டிருக்கிறோம்.

பிரம்மசாரிகளும் கிருஹஸ்தர்களும் ஆவணி அவிட்டத்தின்போது புதுப் பூணூல் போட்டுக் கொள்ளுமுன், வேதவியாஸரைக் கும்பத்தில் ஆவாஹனம் செய்து பூஜை செய்கிறார்கள். சந்நியாசிகளில் பூணூல் போட்டுக் கொள்ளுகிற பிரிவினர் இருந்தாலும், பெரும்



பாலும் பூணூலை அறுத்துப் போட்ட சந்நியாசிகள்தான் இருக்கிறார்கள். மற்றவர்கள் உபாகர்மத்தின்போது வியாஸருக்கும், மற்ற ரிஷிகளுக்கும் பூஜை, தர்ப்பணம், ஹோமம் எல்லாம் செய்து விடுகிறார்கள். உபாகர்மம் இல்லாத சந்நியாசிகள் வியாஸருக்கும் மற்ற குருமார்களுக்கும் பூஜை செய்ய வேண்டும் அல்லவா? சாதுர்மாஸ்ய விரதத்தைத் தொடங்கும்போது சந்நியாசிகள் இந்தப் பூஜையைச் செய்ய வேண்டும் என்று விதிக்கப்பட்டிருக்கிறது. ஒரு சந்நியாசிக்கு மரியாதை அவர் பிறந்த வயதை வைத்து ஏற்படுவதல்ல. அவர் எத்தனை வியாஸ பூஜை செய்தார் என்பதிலிருந்தே மரியாதை ஸ்தானம் கணிக்கப்படுகிறது. வயதில் சிறிய ஒரு சந்நியாசி, வயதில் பெரிய ஒரு சந்நியாசியைவிட அதிக வியாஸ பூஜைகள் செய்திருந்தால், அந்தப் பெரியவரும் இந்தச் சிறியவரை நமஸ்கரிக்க வேண்டும்.

ஆதிசங்கர பகவத் பாதர்களின் சம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்கள் இந்த வியாஸ பூஜையை எப்படிச் செய்கிறார்கள் என்று சொல்கிறேன் :

சாதுர்மாஸ்ய விரதம் தொடங்குகிற பௌர்ணமியன்று வியாஸ பூஜை எங்களால் செய்யப் படுகிறது. இது தமிழ் மாதத்தில் ஆனியாக இருக்கும். இந்தப் பௌர்ணமிக்கே வியாஸ பூர்ணிமை என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. வேத வியாஸரையும் மற்ற எல்லா ஆசாரிய புருஷர்களையும் எலுமிச்சம் பழங்களில் ஆவாஹனம் செய்து பூஜிக்கிறோம்.

ஒவ்வொரு தொகுப்பிலும் ஞானத்துக்கு மூலபுருஷர்களாக இருக்கிற ஐந்தைந்து பேரை வைத்து, இவ்வாறு ஆறு தொகுப்புக்களுக்குப் பூஜை செய்கிறோம்.

வியாஸர் எந்த நாராயணனின் அம்சமோ, அந்த நாராயணனின் பூரண அவதாரமான கிருஷ்ண பகவானுக்கு 'ஜகத்குரு' என்ற விருது உண்டு. கீதாசாரியனான அந்தப் பரமாத்மாவை மத்தியிலும் அவருக்கு நாலு புறமும் அவரது அம்ச சக்திகளான வாசுதேவர், ப்ரத்யும்னர், அநிருத்தர், ஸங்கர்ஷணர் என்பவர்களையும் வைத்து முதலாவதான 'கிருஷ்ண பஞ்சக'த்தில் பூஜிக்கிறோம்.

இரண்டாவது வியாஸ பஞ்சகம். வியாசர் மத்தியில். சுற்றிச் சீடர்களான பைலர், வைசம்பாயனர், ஜைமினி, ஸுமந்து.

மூன்றாவதாக பகவத்பாத பஞ்சகம். இதில் மையமாக ஆதிசங்கர பகவத்பாதர்கள் இருப்பார்கள். நாலு புறத்திலும் அவரது சிஷ்யர்களான பத்மபாதர், ஸுரேசுவரர், ஹஸ்தாமலகர், தோடகர் இருப்பார்கள்.

நாலாவது ஸனக பஞ்சகம் எனப்படும். இவர்கள் பிரம்மஞானிகளும், பிரம்மபுத்திரர்களும் ஆவர். நடுவில் ஸனகர். சுற்றிலும் ஸநந்தனர், ஸநாதனர், ஸநத் குமாரர், ஸநத்ஸுஜாதர் ஆகிய நால்வர்.

ஐந்தாவது பஞ்சகம் 'த்ராவிட பஞ்சகம்' எனப்படும். ஆதி சங்கரருக்கு மிகவும் முற்பட்ட திராவிடாசாரியர் மத்தியில் இருப்பார். ஸ்ரீசங்கர பகவத்பாதர்களின் குருவுக்குக் குருவான கௌடபாதசாரியர், சங்கரரின் நேர் குருவான கோவிந்த பகவத்பாதர், மற்றும் அத்வைத வித்யைக்கு முக்கிய ஆசிரியர்களான ஸம்க்ஷேபகாசாரியர், விவரணாசாரியர் ஆகிய நால்வர் இந்தப் பஞ்சகத்தைச் சேர்ந்தவர்கள். 'திரவிடர்' என்றும், 'கௌடர்' என்றும் பெயர்கள் இருப்பது குறிப்பிடத்தக்கது. தற்காலத்தில் வங்காளத்தை மட்டும் 'கௌட தேசம்' என்கிறோம். தட்சிணத்தைத் 'திராவிடம்' என்கிறோம். ஆனால் பழைய சாஸ்திரங்களிலோ பாரத தேசம் முழுவதையும் சேர்ந்தவர்களை பஞ்ச கௌடர், பஞ்ச திராவிடர் என்றே பத்தாகப் பிரித்திருக்கிறார்கள். இப்போது சரித்திரப் புத்தகங்களில் ஆரியர் – திராவிடர் என்று இரண்டாகப் பிரித்துப் பேசுவதற்கு நம் சாஸ்திரங்களில் ஆதாரம் ஏதும் இல்லை. வெளிநாட்டுக்காரர்கள் நமக்குள் பேதமும், சண்டையும் ஏற்படுத்துவதற்காகச் செய்ததே இந்தப் புதுப் பிரிவினை.

கடைசிப் பஞ்சகம் 'குரு பஞ்சகம்' எனப்படும். இந்தப் பஞ்சகத்தில் பூஜிப்பவரின் குரு, குருவுடைய குருவான பரமகுரு, அவருக்கும் குருவான பரமேஷ்டி குரு, பரமேஷ்டி குருவுக்கும் குருவான பராபர குரு ஆகிய நால்வருக்கும், மற்றும் பிரம்ம வித்யா சம்பிரதாயத்தை வளர்த்த சகல குருமார்களுக்கும் பீடத்தில் வந்த எல்லா ஆசாரியர்களுக்கும் பூஜை செய்யப்படுகிறது.

தவிர, பிறந்ததிலிருந்து பிரம்ம ஞானியாக இருந்த சுகப்பிரம்மம், மற்றும் நாரதர், துர்க்கா தேவி, கணபதி, க்ஷேத்ரபாலர், சரஸ்வதி, பத்துத் திக்குகளின் பாலகர்கள் (எட்டுத் திசைகளோடு மேல் திசை, கீழ் திசை இவற்றையும் சேர்த்தால் பத்துத் திக்கு ஆகும்) ஆகியோருக்கும் வியாஸ பூஜையில் வழிபாடு உண்டு.

இத்தனை மகான்களும், தேவதைகளும், தோன்றிய பேரறிவு ஒன்று இருக்கிறது. அந்த ஒன்றுதான் இத்தனை குருமார்களாகவும், சம்பிரதாயங்களாகவும், சிஷ்யர்களாகவும் தெரிகிறது. அப்படிப்பட்ட அந்த சத்த



ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
...சாரிய சுவாமிகள்

சைதன்யத்தை ஸாளக்கிராமத்தில் ஆவா ஹனம் செய்து வியாஸ பூஜையில் வழிபடு கிறோம். அதன் பிறகு முடிவாக எல்லாருக்கு மாதச் சேர்ந்து ஒரு ஸமஷ்டி பூஜை செய் கிறோம்.

இத்தனை மகான்கள், ஆசாரியர்களின் நாமங்கள் உங்கள் காதில் விழுவதே புண்ணி யம். உங்களை முன்னிட்டு அவர்களை யெல்லாம் நினைத்து, அவர்களைப் பற்றிச் சொல்கிற பாக் கியம் எனக்குக் கிடைத்தது.

'கு' என்றால் இருட்டு. 'கும்மிருட்டு' என்றுகூடச் சொல்கிறோமே. 'ரு' என்றால் விலக்குவது என்று அர்த்தம். அஞ்ஞான இருளை நீக்குகிறவர் 'குரு'. எல்லோருக்கும் குரு பக்தி மிகவும் அவசியம்.

வடக்கே வியாஸ பூர்ணிமையை குரு பூர் ணிமா என்றே சொல்வார்கள். யாரார் எந்தெந்தத் துறையைச் சேர்ந்திருந்தாலும் அந்தத் துறையில் தன் குருவுக்கு இன்று காணிக்கை செலுத்துவது வழக்கம்.

இருதயத்தை அர்ப்பணம் செய்வதுதான் பெரிய காணிக்கை. பாக்கிய வசமாக இந்தப் பாரத தேசத்தில் பிறந்து, மகா புருஷர்களை எல்லாம் ஆசாரியர்களாக அடைந்திருக் கிறோம். அவர்களது உபதேச சாரத்தை அறி வதற்குப் பிரயத்தனப்பட வேண்டும். ஒரு விதமான காரணமுமில்லாத அபார கருணை யோடு நமக்காக இத்தனை பரம தத்துவங்களை விளக்கித் தந்திருக்கிற ஆசாரிய புருஷர்களுக் கெல்லாம் வியாஸ பூஜையின்போது மனமார நமஸ்காரம் செய்வோமாக!

## பூப்போன்றவரல்ல !

பதினேழு வருடங்களில் பூப்பந்தாட்டத் தில் என். சங்கரன் அவர்களை ஒருமுறை கூட யாரும் தோற்கடித்ததில்லை. 1968ம் ஆண்டு எட்டு மேஜர் அறுவை செய்து கொண்ட பின்பும் ஏதோ ஓர் அதிசய சக்தி யால் உந்தப்பட்டு இன்றும் அபாரமாகப் பூப்பந்தாட்டம் ஆடி வருகிறார்.

முந்நூறு வெள்ளிக் கோப்பைகளை அனைத்திந்திய பூப்பந்தாட்டப் போட்டிகளி லும், தமிழ்நாடு, மைசூர் போட்டிகளிலும் பெற்றிருக்கிறார். மைசூரிலும், சென்னை யிலும் என். சங்கரன் பல ஜோடிகளில் ஏராளமான சாதனைகளை உருவாக்கி யிருக்கிறார்.

தெருவில் சென்று கொண்டிருக்கும் பொழுது, யாரோ முன் பின் தெரியாதவர் பூப்பந்தாட்டம் தவறாக ஆடினால் உடனே சென்று சரியாக ஆடும் விதத்தைச் சொல் லிக் கொடுத்துவிட்டுத்தான் திரும்புவார் திரு சங்கரன்!

அறுபத்திரண்டு வயதான இவர் கடந்த நாற்பத்தைந்து வருடங்களுக்கு மேலாகப் பூப்பந்தாட்டம் ஆடி வருகிறார்.

- எஸ். வரலட்சுமி



## நஷ்டமோ நஷ்டம் !

மருந்து தயாரிக்கும் கம்பெனிகள் அதிக லாபமடை கின்றன என்பதால் ரஷ்யக் கூட்டுறவுடன் ரிஷிகேசத்தில் இருபத்தேழரைக் கோடி ரூபாய் மூலதனத்துடன் அர




சாங்கத்தால் ஆரம்பிக்கப்பட்ட மருந்துக் கம்பெனிக்குச் சென்ற ஆண்டுவரை ஏற்பட்ட நஷ்டம் ரூபாய் 34.55 கோடி! - ஆதாரம்: காரவான்

## திருட்டும் கணக்கும் !

அஸ்ஸாம் பொதுப்பணித் துறையைச் சேர்ந்த என்ஜி னியர் ஒருவர் தம் வீட்டிலிருந்து 30,000 ரூபாய் திருட்டுப் போய்விட்டதாகப் போலீஸில் புகார் செய்தார். போலீஸார் மிகுந்த பிரயாசைப்பட்டுத் திருடனைப் பிடித்தனர். அவனிட மிருந்து 1,09,000 ரூபாய் கைப்பற்றப்பட்டது. திருடன்



இந்தப் பணம் முழுவதையும் என்ஜினியர் வீட்டில் திருடியதாகக் கூறினான். என்ஜினியரிடம் மீதிப் பணத் துக்குக் கணக்குக் கேட்டபொழுது கொடுக்க முடியாததால் என்ஜினியரை சஸ்பெண்ட் செய்து அவர் சொத்து பற்றி விசாரிக்க ஒரு குழு ஏற்பாடாகியுள்ளது.

ஆதாரம்: காரவான் தகவல்: சுப்பாமணி

# நீங்கள் செய்வது எதுவானாலும் சரி, பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் அதை சிறந்த முறையில் செய்ய உதவுகிறது.



பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் ஒரு 100 வாட் பல்பினைப் போல் இருபங்கு ஒளி தருகிறது. இருப்பினும் இதற்கு ஒரு 40 வாட் பல்புக்கான அளவு மின்சாரமே தேவைப்படுகிறது. பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் பொருத்தி மின்சாரத்தை மிச்சப்படுத்துங்கள்.
தரம் மற்றும் உழைப்பு இவ்விஷயத்தில் பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட்டே வாங்குவதற்குச் சிறந்ததாகும். கச்சிதமான பிலிப்ஸ் ஸ்ட்ரிப்லைட் யூனிட் தரமான உறுப்புகளுடன் முன்கூட்டியே ஒயர் செய்யப்பட்டதாகும். பொருத்துவதற்கு எளிதானது. உபயோகிப்பதற்கு சிக்கனமானது. வேலைகளை சிறந்த முறையில் செய்ய இது உதவுகிறது—உங்கள் கடையிலும் சரி, வீட்டிலும் சரி.

சிலவில்
இருபங்கு
ஒளி!

சிறந்த ஒரு லாம்ப் வேண்டுமா?
அதை முதலில் அளிப்பது பிலிப்ஸ்

## பிலிப்ஸ்

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்



# ஒப்பற்ற விம் பளபளப்பு உங்களுக்கு இப்போது 55 பைசா பேக்கெட்டிலே

நீங்கள் அறிந்த விம், பிசுக்கோ, கீறலோ, கசடோ எதனையுமே அணுவளவும் படிய விடாத அதே நுரைவளம், அதே அபார சக்தி, வந்துவிட்டது இன்று கையகலப் பேக்கெட்டிலே. துலக்கிப் பாருங்கள் எவர்ஸில்வர் பாத்திரங்களை — ஒரே ஒரு பேக்கெட் விம், நூற்றுக்கு மேற்பட்ட பாத்திரங்களைப் பளிச்சிட வைக்கும் ஒப்பற்ற ஒளிமயமாக — இத்தனைக்கும் 55 பைசாதான்.

Vim
with super foaming action
Cleans shining bright

**மாசில்லாத பளபளப்பை வீசிட வைப்பது விம்**

தேர்ந்தெடுத்த ஒரு சில நகரங்களில் மட்டுமே கிட்டும்.

# ராஜாஜியின் ஜெயில் டைரி



### 1922 பிப்ரவரி, 12உ

ஞாயிற்றுக் கிழமை: என்னை வந்து பார்க்கும்படியாகச் செட்டியாருக்கும் ராமநாத்துக்கும், ராமசாமி நாயக்கருக்கும் தந்திகள் எழுதி, அவற்றைத் தபாவில் சேர்த்துவிடும்படி சிறை ஆபீசுக்கு அனுப்பினேன்.

சிறைத் தலைமை அதிகாரி சென்னைக்குச் சென்றிருந்தபடியால் என்னுடைய தந்திகள் அனுப்பப்படவில்லை. என்னிடம் கொண்டு வந்து கொடுக்கப்பட்டன. வீட்டிலிருந்து வந்துள்ள கடிதம் பார்த்த பின் அனுப்பலாம் என்று என்னிடமே வைத்துக் கொண்டேன். வீட்டுக் கடிதத்தை இரண்டு நாட்கள் கழித்தே தந்தார்கள். அதனால் தந்திகளை நேற்றுத்தான் அதிகாரியில் அனுப்பினேன். என் துரதிர்ஷ்டம் ஒரு தந்தியில் நான் எழுதிய விலாசம் போஸ்ட் மாஸ்டருக்குத் தெரியவில்லையாம்.

நேற்று நான் ரங்கம் செட்டியாரைப் பார்க்கப் போயிருந்தேன். ஐயோ, பாவம் ! அவருக்கு இவ்வளவு அதிக நோய் என்று அறியேன். வெறும் துரும்பு போல் ஆகிவிட்டார். எமன் வந்து எதிரில் நிற்பதாகக் கூறினார். ''நான் இறந்து போனால் என்னை அடக்கம் செய்யாமல் கண்ட துண்டமாக வெட்டி விடுவார்கள், அதுதான் என் கவலை'' என்று அவர் கூறியதைக் கேட்க விநோதமாகத்தான் இருந்தது. அதைத் தடுப்பதற்காகத்தான் என்னைப் பார்க்க விரும்பினாராம்.

### 1922 பிப்ரவரி, 13உ

திங்கட் கிழமை:

என்னுடைய நண்பர்கள் என்னைப் பார்க்க வருவார்கள் என்று என்னுடைய அண்ணா எழுதியபடி அவர்கள் நேற்று வரவில்லை. என் தந்தி தாமதமாகக் கிடைத்திருக்கலாம். அதனால் தான் அவர்கள் இன்னும் வரக் காணோம்.

ஜனங்களைத் தங்கள் பக்கம் திருப்புவதற்காகச் சர்க்கார் பெரு முயற்சி செய்வதாகத் தெரிகிறது. சாத்விகச் சட்ட மறுப்பால் அமைதி குலையுமாம், வீட்டில் சந்தோஷ வாழ்வு பாழாகுமாம், நீலிக் கண்ணீர் வடிக்கின்றது. அந்தக் கண்ணீர் அளவைப் பார்த்தால் தேசம் முழுவதையுமே நீரில் அமிழ்த்திவிடக் கூடிய அளவாகத் தெரிகிறது. ஆனால் நிலைமையை மாற்றக் கூடிய காரியம் அவர்களிடமே உள்ளது. சாத்விகச்



சட்டமறுப்பையும் வீட்டுச் சமாதான வாழ்வுக் குலைவையும் நாம் விரும்பவில்லை. அதை விளையாட்டாகக் கருதவுமில்லை. அடிமையாயிருப்பதை விட அந்த வழி சென்று துன்பம் அனுபவிப்பதே நல்லது என்று எண்ணியே அதை மேற்கொண்டோம். ஜனங்கள் துன்பப்படுவதைக் கண்டு உண்மையாகவே இரக்கம் உண்டாகுமானால் சர்க்காரே அதை அரை நொடியில் மாற்றிவிடலாம். 'இயக்கத்தை நிறுத்துங்கள்' என்று கூறுவதற்குப் பதிலாக இயக்கம் எதற்காக ஆரம்பிக்கப்பட்டதோ, அந்தக் கோரிக்கைகளை அளித்து விட்டால் போதும். ஆனால் அவர்கள் நடிப்பது முழுவதும் வெறும் நாடகம்தான்; ஆயினும் அதைக் கண்டு ஏமாறக்கூடிய ஒரு சிலர் இன்னும் இருக்கவேசெய்கின்றனர்.



*"பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளுக்கும், பற்களுக்கும் தீங்கு இழைக்கக்கூடும்..!"*

# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!

பழைமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக்கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும் போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய்நாற்றம் மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி வாய் நாற்றத்தை உடனே நிறுத்தி, பற்சிதைவையும் எதிர்க்கிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

**நவீன பல் பராமரிப்பு முறைகளே *சிக்கனமாக* இருக்கும்போது பழைமையான பற்பொடிகளை ஏன் உபயோகிக்க வேண்டும்!**

உங்கள் குடும்பத்திற்கு
எகானமி சைஸ் கால்கேட்
பற்பொடியை இன்றே வாங்குங்கள்!
ஒரு டப்பா மாதக்கணக்கில் வரும்!






...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.

TP. G 19 TM

# மூன்று முடிச்சுகள்



9

நீண்ட துயில் கண்டு நிம்மதியாய்ப் படுத்திருந்த அந்தக் குழந்தை மாதிரியான பென்னம் பெரிய 'பிளாஸ்டிக்' பொம்மை மோகனசுந்தரத்தை எப்படியெல்லாம் அந்தச் சில கணங்களில் ஆட்டிப் படைத்துவிட்டது! பட்டுத் துணியில் ஒரு தாய்மை அன்புடன் தைத்துப் போடப்பட்ட கவுன்! யாரோ தாலாட்டுக் கீதம் பாடுவது போன்ற பிரமை! பைரவிக்கு ஏற்பட்ட குழந்தை ஆசை, பாசம் அனைத்தும் அந்தப் பொம்மையில் எதிரொலிப்பது போலத் தெரிகின்றன! அதிலும் பெண் குழந்தை மீது அவள் பேராவல் கொண்டிருக்கிறாள் என்பதை அந்தக் கவுன் பறைசாற்றுகிறது. போடுகிற ஆடையில்தானே பொம்மை பெண்ணாகவும் ஆணாகவும் மாறுகிறது!

மோகனசுந்தரத்துக்கு ஓர் எண்ணம் பளிச்சிடுகிறது!

**கே. பாலசந்தர்**

'வைத்துக் கொண்டு ஆளுகிறவிதத்தில்தானே பெண்ணும் 'இல்லாள்' ஆகிறள் !'

நாம் தவறி விட்டோமா ?

நினைவு, கூறியிட்டுக் கொப்புளிக்கிறது !

அன்புடன் அந்தப் பொம்மைக் குழந்தையைத் தூக்குகிறன். கரங்கள் நடுங்குகின்றன. அதற்குள் மனத்தில் என்ன நினைவு புகைந்ததோ? வேலைக்காரனைத் திரும்பிப் பார்த்து, "நீ கீழே போய்க் கவனிச்சிக்க.... நான் அப்புறமா வர்றேன்" என்று ஆணையிடுகிறன். பணியாளனும் மாடியைவிட்டுக் கீழே இறங்கிச் சென்றுவிடுகிறன்.

பொம்மையைத் தூக்கி உற்றுக் கவனிக்கிறன் மோகனசுந்தரம். கழுத்தில் மூன்று பவுன் சங்கிலி ஊசலாடுகிறது !

'ஓ.... இது... இது... திருமணத்தன்று இரவு — முதலிரவின்போது நாம் பைரவிக்கு அன்புடன் அளித்த வெகுமதியல்லவா ?'

**நி**னைவு சுழல்கிறது......!

"பைரவி! இந்தச் சங்கிலி யாருக்குத் தெரியுமா ?"

"எனக்கு...... !"

— பைரவி நாணத்துடன் நாணலைப் போல் நளினமாகத் தலை குனிகிறள் !

மோகனசுந்தரம் முதலிரவின் தேன் சிரிப்பை உதிர்க்கிறன். "அதுதானில்லே! நீ எனக்கு விரைவில் பெற்றுக் கொடுக்கப் போகிற குழந்தைக்கு முன்கூட்டியே நான் தருகிற......."

"வெகுமதியா ?"

"ம்ஹூம் ! அச்சாரம் ! அதற்கப்புறம் கொடுக்கப் போகிறதுதான் வெகுமதி !"

பைரவியின் முகம் கன்றிச் சிவக்கிறது. உதடுகள் கனிந்து துடிக்கின்றன!

"பைரவி! முதல் முதல்லே நீ எனக்கு உன்னை மாதிரியே பெண் குழந்தையைப் பெற்றுத் தரணும் ! முதல்லே பெண் குழந்தை பிறக்கிறதுதான் குடும்பத்துக்கு நல்லது !"

அவள் சிரிக்கிறள்! பூவாய்ச் சிரிக்கிறள் ! பூமா தேவியைப் போலப் பொறுமையாகச் சிரிக்கிறள். பிறகு... பிறகு......

**நி**னைவு கலைந்தது —

துன்பியலால் புகைந்து கருகிப்போன கண்களிலிருந்து நீர்த் திவலைகள் முத்தனைய அரும்பி உதிர்ந்தன !

ஓ... பைரவிக்குத்தான் எத்துணைக் குழந்தைப் பாசம் ! அதிலும் நாம் குறிப்பிட்ட பெண் குழந்தைப் பாசம்? அவளா அப்படிச் சாக்கடையில் குளித்துச் சண்டமாருதம்போல் ஓடி மறைந்து விட்டாள்...... ?

சே ! மீண்டும் அந்தப் படுபாவியின் நினைவா ?

பலவீனமான மனத்தைத் திட்டிக் கொண்டான் !

பலவீனப்படுத்தியது எது ?

இந்தக் குழந்தை..... பொம்மைக் குழந்தை.... பெண் குழந்தை.....

பெட்டியில் வேறு ஏதேனும் இருக்கிறதா என்று துழாவிப் பார்க்க மனம் சென்றது. இயற்கைதானே !

அங்கே !

பெரிய அளவில் அவர்களுடைய திருமணத்தின் போது எடுத்துக் கொண்ட நிழற் படமொன்று மோகனசுந்தரத்தைப் பார்த்துச் சிரித்தது. வேகமும் கோபமுமாக அதனை எடுத்துக் கிழிக்க முனைந்தான். அப்போது—

பின்புறமாக ஏதோ எழுதப் பெற்றிருப்பதைக் கண்டு தயங்கினன். என்ன அது ?

பைரவியின் முத்து முத்தான கையெழுத்து ! தலையெழுத்து சுத்தமில்லாத எவருக்குமே கையெழுத்து முத்து முத்தாக இருக்கும் என்பார்கள்! பைரவி விஷயத்தில் அது எவ்வளவு பொருத்தம் !

வரிகளைப் படித்தான் :

"பைரவி! ஒரு பெண் குழந்தையைச் சீக்கிரமே எனக்குப் பெற்றுக் கொடு!"

அவன் சொன்னதைத் திருமணமான மறு வாரத்தில் இந்தப் புகைப் படத்தின் பின்புறத்தில் அவள் எழுதி வைத்தது மோகனசுந்தரத்துக்கு நினைவு வந்தது. அன்று சிரித்தவன் இப்போது நாணினன்.

பொம்மைக் குழந்தையைப் பெருமூச்சுடன் தடவிக் கொடுத்தான். அப்படி அன்புடன் தடவிக் கொடுக்கிற போது —

கவுன் துணிக்குக் கீழே மறைந்திருந்த ஒரு கடிதம் தட்டுப்பட்டது. டாக்டர் ஒய். மகாதேவன் ஆங்கிலத்தில் எழுதியிருந்த அதைப் பிரித்துப் படித்தான், வியப்புக் கலந்த ஆர்வத்துடன்!

" திருமதி பைரவி அவர்களுக்கு,

போலீஸ் உத்தியோகத்தின் தொடர்பாக உங்கள் கணவர் வீரத்துடன் செயலாற்றி, கடமைக்கிடையில் கடுமையான காயம் அடைந்து ஆஸ்பத்திரியில் எனது கண்காணிப்பின் கீழ் இருந்து வந்தார். கடமை வீரர் தமது காலை

மட்டும் இழக்கவில்லை, விதி வசத்தால் ஒரு தகப்பனாராகக் கூடிய வாய்ப்பையும் இந்தப் போராட்டத்தில் இழந்து விட்டார் என்பதை அவரிடம் சொல்லக் கூடாது என்று என்னைத் தடுத்து விட்டீர்கள். அவர் ஒரு குழந்தைக்காக ஏங்கிக் கொண்டிருப்பதாகவும் இதைச் சொன்னால் அவர் மனமுடைந்து போவார் என்பதாகவும் கண்ணீர் பெருக்கிக் கெஞ்சினீர்கள். உங்கள் வேண்டுதலை என்னால் மறுதளிக்க முடியாமல் வாளாவிருந்து விட்டேன். ஆனாலும் யோசித்துப் பார்க்கும்போது இது தவறு என்று தோன்றுகிறது. உண்மையை மோகன சுந்தரத்திடமிருந்து மறைப்

பது உங்களுக்கோ அல்லது எனக்கோ நல்லதல்ல. விரைவில் அவரிடம் சொல்லிவிடுங்கள். — ஒய். மகாதேவன்''

மோகன சுந்தரத்தின் கரங்கள் நடுங்கின. இதயம் படபடவென்று அடித்துக் கொண்டது.

எல்லாமே புரிந்து விட்டது மோகன சுந்தரத்துக்கு! பைரவி உண்மையை மறைத்ததோடு இந்தக் கடிதத்தையும் மறைத்துவிட்டாள் தன்னிடமிருந்து.

பைரவியின் அத்தியாயத்தில் புதைந்து கிடந்த ஒரு துடிப்பு நிறைந்த உண்மை பொறி பொறியாய்த் தெறிக்கத் தொடங்கியது!

அவன் உடல் நிலை தடுமாறியது; உள்ளம் பதறியது. அப்போதும் அவளை மன்னிக்கத் தோன்றவில்லை அவனுக்கு. இந்த ஜன்மத்தில் மன்னிப்பு அவளுக்குக் கிடையாதுதான். ஆனாலும் அவளுடைய தாய்மைத் துடிப்பையும் கணவனுக்கு ஏமாற்றம் அளிக்கக் கூடாது என்ற அவளது ஏக்கத்தையும் ஏதோ கொஞ்சம் புரிந்து கொண்டு சற்றே அனுதாபம் காட்டலாம்போல் இருந்தது.

இதற்குள் பக்கத்து அறையினுள் 'டைப்' செய்து கொண்டிருந்த சீதா, வெளியே வந்தாள், தட்டுத் தடுமாறி நடந்து. ''என்ன சத்தம் கேட்டது? யாரது? மேலே யாராவது இருக்கிங்களா? அல்லது கீழே போயாச்சா?''

மோகனசுந்தரத்தின் சிந்தனை கலைந்தது. பதற்றமான, சோகமான, அதிர்ச்சிமிக்க சிந்தனைகளுக்கு முடிவு ஏற்படா விட்டாலும் தாற்காலிக விடுதலையாவது கிடைக்கும் என்ற அளவில் அவன் சீதாவின் இடையூற்றினை வரவேற்றான். அவளைத் திரும்பிப் பார்த்தான்.

''நான் மேலேதான் இருக்கிறேன், சீதா.''

''ஓ..... ஐயாவா? என்ன செய்யறீங்க?''

ஒரு பெட்டி பாழடைந்திருந்தது. துரு ஏறிவிடவே அதை உடைக்க வேண்டியதாகப் போயிடுச்ச!''

# தட்டும் லட்டும்

மியூஸிக் அகாடெமியில் 'தனிக் குடித்தனம்' நாடகம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.

கல்யாணம் முடிந்து புது மாப்பிள்ளை வீட்டுக்கு வந்து சேருகிறார். கட்டுச்சாதக் கூடையும் பட்சண மூட்டைகளும் வந்து சேருகின்றன.

நடந்த கல்யாணத்தில் எடுபிடி வேலை செய்து உதவிய பையன் கிட்டு கல்யாண பட்சணங்கள் கிடைக்கும் என்ற ஆசையில் தயங்கி நிற்கிறான். அதை அறிந்த புது மணப் பெண் காமு, ஒரு தட்டில் பட்சணங்களை எடுத்து வந்து அவனிடம் தருகிறாள். கிட்டு பட்சணங்களை வாங்கிக்கொண்டு வாசலுக்குச் சென்றதும் அங்கே பையன்கள் அமளி செய்கிறார்கள். கூச்சலைக் கேட்டு சகியாமல் காமு ''என்ன சத்தம்.... உஸ்.... யார் அங்கே?...'' என்று அதட்டுகிறாள்.

வாசல் பக்கம் காமு திரும்பிப் பார்த்துக் கொண்டிருக்கும்போது அவள் கையில் உள்ள தட்டில் ஒரு லட்டு மீதி இருக்கும். அந்த லட்டைப் பின்புறமாக வந்து திருட்டுத்தனமாக மாப்பிள்ளை பாலு எடுத்துக் கொண்டு மறைவான்!

மாப்பிள்ளை பாலு சாது, அப்பாவி, சங்கோஜம் நிறைந்தவன் என்பதைச் சித்திரிக்கும் காட்சி அந்த லட்டு திருடும் காட்சி.

அந்தக் காட்சிக்கென்றே பிரத்தியேகமாகத் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோயிலிலிருந்து லட்டு வாங்கி வருவது வழக்கம். பாலு திருடி வந்ததை உள்ளே நண்பர்கள் காத்திருந்து பங்கு போட்டுக் கொள்வார்கள்.

## நாடகத்துக்குள் ஒரு நாடகம்

ஆனால் - அன்று.....

லட்டு திருடும்போது, தவறிப் போய்த் தட்டில் கைபட அது கீழே விழுந்து உருளுகிறது. லட்டு தான் தானாகச் சிதறி விடுகிறது! காமு திடுக்கிட்டுத் திரும்புகிறாள். அசட்டுச் சிரிப்புடன் பாலு, கையைப் பிசைகிறான். உள்ளேயும் ஓடிவிடுகிறான்!

லட்டுக்காக மேடைக்குப் பின்னால் காத்திருந்தவர்கள் ஏமாந்தது ஒருபுறமிருக்க, காமு நிலைமையை எப்படிச் சமாளிக்கப் போகிறாள்?

காமு, லட்டுச் சிதறல்களைத் தட்டில் வாரிய படியே, ''இது யார் வீடு?... உங்க வீடு தானே?...... லட்டுக்கு நீங்க ஆசையா இருக்குன்னு சொன்னா எடுத்துத் தர மாட்டேனா?... கூடை நிறையப் பட்சணம் எங்காத்திலே தந்திருக்காளே....'' என்று கணவனிடம் பேசுவது போல் தனக்குத்தானே சொல்லிக் கொள்கிறாள் சமயோசிதமாக. இதுவும் நாடக சம்பவம் என்றே பார்த்துக் கொண்டிருந்தவர்கள் ரசிக்கிறார்கள்.

''நடந்தது தவறுதான் என்றாலும் மாப்பிள்ளைப் பாத்திரம் பாலுவுக்கு, அவன் சாது சுபாவத்துக்கு அந்தத் தவறின் மூலமே தனிச் சிறப்பைத் தேடித் தந்துவிட்டார் காமுவாக நடித்த ஸ்ரீமதி கௌசல்யா'' என்று கூறுகிறார் திரு பூர்ணம் விசுவநாதன். மாப்பிள்ளை பாலுவாக நடிப்பவரும் பூர்ணம் விசுவநாதனே!

- சிவபாலன்



''த்சு, த்சு, த்சு! எந்தப் பொருளையும் நாம வைச்சுக்கிறதுலேதான் இருக்கு! கவனிப்பு இல்லேன்னு கெட்டுத்தான் போகும்!''

''அப்படியா சீதா! உனக்குக் கண்ணு இல்லேங்கிறதைச் சுட்டிக் காட்டறதா நினைக்க வேண்டாம்..... தங்கம்னு ஒரு பொருள் இருக்கு. அதை எங்கே வைச்சுட்டு யாரு கவனிக்க லேன்னாலும் கெட்டுப் போறது கிடையாது'' என்றான் மோகனசுந்தரம்.

சீதா சிரித்தாள்.

''என்ன சீதா, சிரிக்கிறே?''

''ஒண்ணுமில்லேங்க.... எனக்குக் கண்ணுதான் இல்லே. நெஞ்சு இருக்கு. தங்கத்தை நான் பார்த்ததில்லேங்கிறது உண்மைதான். ஆனா கேள்விப்பட்டிருக்கேன். அது கெடாது. கவனிப்பில்லேன்னா திருடு போயிடும். நெசந்தானுங்களே?''

பைரவியும் கவனிப்பில்லாமல் 'திருடு' போனவள்தானோ?

அதிர்ச்சி கண்டவனைப்போல் மருள மருள நோக்கினான் மோகனசுந்தரம்.

''நான் தப்பா ஏதானுச்சும் சொல்லிட்டேனுங்களா?'' சீதா பயந்தாள்.

''ம்.... அதெல்லாம் ஒண்ணுமில்லே! சீதா! ரொம்பப் பெரிய உண்மையை ரொம்பச் சாதாரணமா சொல்லிட்டே! கண்ணு இருக்கிறவங்களுக்கும் இல்லாதவங்களுக்கும் இதுதான் வித்தியாசம்! சரி, நீ டைப் அடிச்சிட்டியா?''

''அடிச்சுக்கிட்டே இருக்கேன்.''

எதிர் அறைப் பக்கமாகச் சென்று அங்கிருந்த பழைய மெஷினைப் பார்த்தான். அதில் 'லட்சுமி லட்சுமி' என்று வரிசை வரிசையாக டைப் அடிக்கப்பட்டிருந்தது.

''என்ன சீதா இது?''

''மன்னிக்கணும் ஐயா! இங்கே வர்ற மாணவர் ஒருத்தரை லட்சுமிக்கு இங்கிலீஷ்லே எப்படின்னு கேட்டேன். 'எல், ஏ, கே, எஸ், எச், எம், ஐ'ன்னு சொன்னாரு. நான் என் இஷ்ட தெய்வத்தை முதல்லே அடிச்சு மனசாரப் பார்த்துக்கிட்டேன்! கல்வி கற்பதற்கு முன்னால் கடவுள் வணக்கம் மாதிரி.'' சீதாவின் கண்கள் கலங்கி விட்டன.

அறைகளைப் பூட்டிக் கொண்டு இருவரும் மாடியை விட்டுக் கீழே இறங்கி வந்தனர்.

சமையற்காரன் உணவு பரிமாறினான்.

உண்டு முடிந்ததும் இருவரும் வெளி வராந்தாவில் ஓய்வாக அமர்ந்தனர். திருமணம் பற்றிய விஷயத்தை அது வரையில் சீதாவுக்குத் தெரிவிக்கவில்லை. ஏன், இதுவரை ஒருவருக்குமே தெரியாது. அழைப்பிதழை அச்சகத்துக்குக்



வாசல்லே அரிசிக்காரன், பால்காரன், மளிகைக்காரன், வெண்ணெய்க்காரன் வரிசையில் முன்னாலே நம்ப மூணு குழந்தைகளும் உட்கார்ந்திண்டிருக்கா. ஸ்கூல் திறந்தாச் சொல்லியோ!

கொடுத்து விட்ட பிறகு முதல் முறையாக இதனைச் சீதாவிடம் வெளிப்படுத்த நினைத்திருந்தான் மோகனசுந்தரம்.

''சீதா! கல்யாண விஷயமா உங்கிட்டே பேசணும்னு நினைச்சேன்'' என்று தொடங்கினான்.

''எனக்கா? இந்தக் குருடிக்கா?'' என்றாள் சீதா அலட்சியப் புன்சிரிப்புடன்.

என்ன இது? எதையோ ஆரம்பிக்கப் போய் எதைப் பற்றியோ பேச வேண்டியதாயிருக்கிறதே!

''உனக்குக் கண் ஆபரேஷன் முடிந்ததும் கல்யாணம்தான்!''

''மாப்பிள்ளையைப் பார்த்தாச்சா!''

''ஓ.... பார்த்தாச்சே!''

''உங்க இன்ஸ்டிட்யூட்டிலே யாரோ மாணவர்னு சொன்னீங்களே, அவங்களா?''

''ஆமாம், அவனுக்கென்ன?''

''அவங்களுக்கு ஒண்ணுமில்லே! என்னைக் கல்யாணம் பண்ணிக்கிட்டு இங்கேயே இருப்பாரா? அல்லது நீங்க எனக்குக் கல்யாணம் பண்ணி மாமியார் வீட்டுக்கு அனுப்பிட்டு என்னைப் பிரிஞ்சு இருப்பீங்களா? இந்தப் பிரச்னைக்கு முடிவு கண்டாகி விட்டதா? அதாவது அவ்வளவு சுலபமாகக் கத்தரித்துக் கொண்டு போய்விடக் கூடிய நட்புதானா நம்முடையது?''

மோகனசுந்தரத்துக்கு என்ன பதில் சொல்வதென்றே புரியவில்லை. அவன்

தனக்கு நடக்கப் போகிற திருமணத்தைப் பற்றிக் கூறப்போய், அவள் தன்னுடைய பிரச்னைக்கு முடிவு கண்டாகி விட்டதா என்று கேட்கிறாளே!

"நான் தப்பாக் கேட்டுவிட்டேனா?"

"இல்லே, சீதா! நாளைக்கு இந்தப் பிரச்னைக்கு முடிவு சொல்றேன். போய் ஓய்வு எடுத்துக்கொள்."

"இங்கே ஓய்வு எடுத்துக்கிடறது தானே எனக்குக் காரியம்!" அவள் சிரித்தாள். கன்னங்களில் குழி விழுந்தது. போஷாக்கான உணவு காரணமாக, அமைதி, ஆதரவு, அன்பு இவற்றின் விளைவாக அவள் முன்னைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அழகாக விளங்கினாள் இப்போது!

பெட்டியில் இருந்த குழந்தைப் பொம்மை இன்னமும் மோகனசுந்தரத்தை அலைக்கழித்துக் கொண்டிருந்தது. அதுவரையில் பைரவியைப் பற்றிய நினைவு நெஞ்சில் எழுவதே பாவமான காரியம் என்று எண்ணி வந்தவனுக்கு எத்தனை எத்தனையோ நினைவுகள் எழுந்து விட்டன. நெற்றியைப் பிசைந்துகொண்டான்; எதை எதையோ நினைத்துப் பார்த்து விட்டான்!

பைரவியின் மீது அவனையுமறியாமல் இலேசாக ஒரு பரிதாப உணர்ச்சி மேலிட ஆரம்பித்தது.

அன்று மாலை கமலம் இன்ஸ்டிட்யூட்டுக்கு வரவில்லை. 'தமக்கைக்கு உடல் நிலை சரியில்லை என்று சொன்னாளே. அது விஷயமாக வரச் சந்தர்ப்பம் இல்லாமல் போய்விட்டதோ என்னமோ' என்று எண்ணிக் கொண்டான் மோகனசுந்தரம்.

உதய சூரியன் கிழக்கு வானில் புன்னகை புரிந்து பொழுதை அரங்கேற்றினான். காலைக் கடன்களை விரைந்து முடித்துக்கொண்டு வெளியே புறப்படத் தயாரானான் மோகனசுந்தரம். அவனுக்காகப் பல வேலைகள் காத்திருந்தன. முதலாவதாக மாணவன் லோகிதாசன் மனைவிக்குச் சீமந்தம்! பிறகு அச்சகத்துக்குச் சென்று திருமண அழைப்பிதழின் 'புரூஃபை'த் திருத்த வேண்டும். அடுத்தபடியாகச் சீதாவை மணக்கச் சம்மதித்திருந்த அந்த மாணவனுடைய பெற்றோரைச் சந்தித்துச் சில பல விஷயங்களைப் பற்றிப் பேச வேண்டும்.

வேலைக்காரன் டாக்சியைக் கொண்டு வந்து நிறுத்தினான்.

"அந்தப் பொம்மையைக் கொண்டு போய் டாக்ஸியில் வை!" என்றான் மோகனசுந்தரம்.

வேலைக்காரனுக்குப் புரிந்து விட்டது! நேற்று அந்த டிரங்குப் பெட்டியில் இருந்த பொம்மை அது!

சீமந்தப் பரிசாக அதையே கொடுத்து விடலாம் என்பது மோகனசுந்தரத்தின் முடிவு. தனக்குத்தான் பயன்படவில்லை, அந்தக் குடும்பத்திலாவது அதனால் மகிழ்ச்சி பொங்கட்டுமே!

கண்களில் மெல்லிய நீர்த் திரை! அதிலே பைரவியின் சலனம் இழையோடிற்று.

டாக்ஸியில் சென்று அமருகிற போது....

ஒரு மாணவன் அவசரம் அவசரமாக ஓடி வந்தான்.

"என்ன ராமு? ஏன் இந்த அவசரம்?" என்றான் மோகனசுந்தரம். டாக்ஸியின் கதவைச் சாத்தியும் சாத்தாமலுமாக!

"சார்! உங்களுக்கு விஷயம் தெரியாதுங்களா? இன்ஸ்டிட்யூட்டுக்குப் புறப்பட்டு வர்றபோது நம்ம கமலம் மாளின் வீட்டிலே கும்பல் இருந்தது. இன்னான்னு விசாரிக்கப் போனேன். அவங்க அக்காவாம். செத்துப் போயிட்டாங்க!" என்றான் ராமு.

"அட கடவுளே! இங்கு சொல்லி அனுப்ப ஆளில்லாமல் தவிக்கிறாளோ என்னவோ! சரி சரி! நீ டாக்ஸியிலே ஏறி வழி காட்டு!"

டாக்ஸி புறப்பட்டது.

கமலம் குடியிருந்த வீட்டை முதல் முறையாக மிதித்தான் மோகனசுந்தரம். மனைவியாகப் போகிறவளின் வீட்டை இப்படி துர்ச் சகுனத்துடன் மிதிக்க நேர்ந்தது குறித்து மனத்தில் மெல்லிய கிலேசம் எழத்தான் செய்தது. ஆனாலும் அதனைப் பொருட்படுத்தாமல் உள்ளே நுழைந்தான்.

மோகன சுந்தரத்தைக் கண்டதும் நெருப்பை மிதித்தவளைப்போல் அரண்டு விட்டாள் கமலம். அவள் எதிர்பார்க்கவே இல்லை. இறுதிக் கடன்கள் முடிந்த பிற்பாடு தன் சகோதரி இறந்து விட்டதாகச் சொல்லி அனுப்பிக்கொள்ளலாம் என்று எண்ணியிருந்தாள். ஆனால் அவள் ஆட விருந்த நாடகத்தை விதிதான் முன்கூட்டியே ஒரு மாணவன் வழியாக மாற்றி விட்டதே!

தலைமாட்டில் விளக்கெரியப் பைரவி எலும்பும் தோலுமாகப் பிணமாகிப் படுத்து எழாத நித்திரை செய்துகொண்டிருந்தாள்!

அவளைக் கண் கொட்டாமல் பார்த்தான் மோகனசுந்தரம். நம்ப முடியவில்லை. ஆனாலும் அவள் பைரவிதான். பைரவியேதான்!

# கதிரவன் உதிக்கும்...

அற்புதமான சிறிய நகரம் தாவண்கெரே. இந் நகரம் நந்திக் கடவுளின் உறைவிடமான மைசூர் மாநிலத்தில் பருத்திப் பயிராகும் பகுதியில் உள்ளது.

இங்கேதான்-நாற்பது ஆண்டுகளுக்குமுன் காலம் சென்ற தர்மபிரவர்த்தா ராஜனஹள்ளி ஹனுமந்தப்பா தாவண்கெரே பருத்தி ஆலையைத் துவக்கினர்.

இன்று இந்த ஆலை மைசூர் மாநிலத்து ஆலைகளில் சிறந்த ஒன்றாக விளங்குகிறது. பாரதமெங்கும் விற்பனையாகும் தரம் மிகுந்த துணிவகைகளைத் தயாரித்து வெளிநாடுகளுக்கும் ஏற்றுமதி செய்கிறது. ஆயிரக்கணக்கான மக்களுக்கு ஊதியமுள்ள வேலை வாய்ப்பினையும் அளிக்கிறது.

## தாவண்கெரே துணிவகைகள்

'தி தாவண்கெரே காட்டன் மில்ஸ் லிமிடெட்'
- பண்டைய மரபை இன்றைய வடிவாய்ப் படைக்குமிடம்!



Thomas/DCM/8d TM

கழுத்தில் மஞ்சள் கயிறு—அவன் கட்டிய தாலி புரண்டு கொண்டிருந்தது. அவன் கண்கள் கலங்கின.

''கமல்....'' பேச்சு வரவில்லை.

கமலம் அருகே வந்து, ''என் தமக்கை...'' என்றாள். அவள் உதடுகள் துடித்தன.

''பை....''

''ம்... பைரவிதான்!''

கண்களை இறுக மூடினான் மோகனசுந்தரம். பிறகு வெளியேறினான்.

டாக்ஸியில் இருந்த பொம்மையை எடுத்துக் கொண்டு தள்ளாடி நடந்து வந்தான். அந்தப் பொம்மையை ஒரு முறை பார்த்தான். அடுத்து—

அதனை மிகவும் பவ்வியமாகப் பைரவியின் கால்மாட்டில் வைத்து விட்டுக் கொஞ்ச நேரம் மௌனமாக நின்றான். கண்கள் இரு சொட்டு நீர்த் துளிகளைச் சிதறின.

அவளுக்குரிய இறுதிச் சடங்குகளைச் செய்ய அவன் தயங்கவில்லை. 'இறந்து விட்ட அவர் மனைவி என்பதையே மறைத்துவிட எண்ணினேனே! எவ்வளவு பெரிய தவறு? ஆண்டவனைப் பார்த்து அவரை இங்கு அனுப்பி வைத்தார்' என்று எண்ணினாள் கமலம். ஆனால் ஜன்மப் பகைவனானாலும் இறந்துவிட்டவன் பேரில் இரக்கம் ஏற்படுவது இயல்புதானே? மேலும், அண்மையில்தான் பைரவி விஷயத்தில் மோகனசுந்தரம் ஓரளவு மனமாற்றம் அடைந்திருக்கிறான் என்பதைக் கமலம் எப்படி அறிவாள்?

எல்லாம் முடிந்த பிறகு சொல்லிக் கொள்ளாமல் அவன் பாட்டில் நடந்து சென்று ஒரு டாக்ஸி பிடித்து ஏறிக் கொண்டான். டாக்ஸி விரைந்தது. இரு புறத்து ஜன்னல் வழியாக, 'பைரவி, பைரவி' என்று யாரோ குரல் கொடுப்பது போன்ற பிரமை....

சிறந்த வைபவத்தில் அவன் எப்படிக் கலந்து கொள்ள முடியும்? சீதாவின் திருமணம் பற்றிப் பேச வேண்டும்; ஆனால் இதுவல்ல அதற்கு நேரம்! அச்சகத்துக்குச் செல்ல வேண்டும். அதற்கும் இப்போது சந்தர்ப்பம் சரியில்லை.

நேரே வீட்டை அடைந்து தலை முழுகினான். மௌனமாய்ச் சக்கர நாற்காலியில் அமர்ந்து கிடந்தான்.

மூன்று தினங்கள் கழிந்து...

கமலம் சோர்ந்த முகமும் வீங்கிய கண்களுமாக இன்ஸ்டிடியூட்டுக்கு வந்தாள். வாசற்படியில் சீதா அமர்ந்து அழுது கொண்டிருந்தாள்.

ஏன் இவள் அழுகிறாள்? ஒருகால் தன் தமக்கையின் இறப்பைக் கேள்விப்பட்டு.....

நம்மைப் பார்த்ததும் அழுகை வர இவளுக்குக் கண் இல்லையே!

''சீதா! ஏனம்மா, அழறே?''

''யாரு? கமலாக்காவா? எங்கே ரெண்டு மூணு நாளாக் காணோம்?''

தயங்கினாள். சீதாவுக்கு மோகனசுந்தரம் விஷயத்தைத் தெரிவிக்கவில்லை என்பது புரிந்தது. ''உடம்பு சரியில்லை; ஆமாம்; நீ ஏன் அழறே?''

''என்னை யாருக்கோ கல்யாணம் செய்து கொடுத்து இங்கேயிருந்து அனுப்பிவிடப் போறாங்களாம் நம்ம ஐயா!''

''உனக்குப் போறதுக்கு விருப்பமில்லையா?''

''துளிக்கூட விருப்பம் இல்லை. கண் இல்லாவிட்டாலும் என்னால் இங்கே எல்லாத்தையும் பார்க்க முடியுது! அதுவும் எனக்குக் கண்ணு தெரிய வழியே இல்லேன்னு என்னை நன்னா சோதித்துப் பார்த்த டாக்டர் முடிவாச் சொன்னப்புறம் எனக்கு இந்த இடத்தின் மேலும் இங்குள்ளவர்கள் மேலும் முன்னெப்போதையும்விடப் பற்றுதல் அதிகமாயிடுத்து. இது என்னோட இன்ஸ்டிடியூட்! கமலாக்கா! நம்ம ஐயாவுக்குக் கால் இல்லையாமே!''

''ஆமாம்!''

''அதுதான் கண்ணில்லாத என்மேல் பரிதாபப்படுறாரு! எனக்கு வாழ்வளிக்க ஆசைப்படுறாரு. ஆனால் இவர் சொல்

## உதட்டுச் சாயம் உடம்புக்கு நல்லது!

ஜெர்மனியில் அழகு சாதனங்கள் கண்காட்சியில் இடம் பெற்றிருந்த ஒரு பொருள்: விட்டமின்கள் நிறைந்த லிப்ஸ்டிக். இதில் விட்டமின்கள் ஏ, டி, ஜீ, இ ஆகியவையும், பி விட்டமினின் பல பிரிவுகளும் அடங்கியுள்ளன. ஆண், பெண் இருபாலாருக்கும் பேருதவி புரிவதாக இதைத் தயாரிக்கும் நிறுவனம் பறைசாற்றிக் கொள்கிறது!

- ஜெர்மன் இண்டர்நேஷனல்.




பேராசிரியர்
கல்கி
படைத்த
பேரிலக்கியம்
சிவகாமியின்
சபதம்
கல்கி
ஆகஸ்ட் 5உ இதழில்
ஆரம்பம்

ளுக்குக் கட்டுப்பட்டுப்பட்டுக் கருணை காட்டி என் கையைப் பிடிக்கிறது வேறே, மனப்பூர்வமா எனக்குக் கட்டுப் படறது வேறே, இல்லையா? அப்படி யார் இருப்பாங்க, இவர் ஒருவரைத் தவிர? பேசாமல் இவரே என்னைக் கல்யாணம் பண்ணிக்கலா மில்லையா?''

அதிர்ந்து போனாள் கமலம்.

'எவ்வளவு பெரிய பேராசை இவளுக்கு?' ஆனால் பாவம் கமலத்தின் உள்ளத்தை அவளால் எப்படிப் புரிந்து கொள்ள முடியும்?

''ஐயாவுக்குக் கால் இல்லேன்னு தெரிஞ்ச பிறகு இந்த வீட்டை விட்டு நான் போக மாட்டேன். எப்பவும் அவருக்குத் துணையாக நான் இருக்கணும்!''

கமலம் மௌனமாக நின்று கொண்டிருந்தாள்.

''ஏனக்கா பேசாம இருக்கீங்க? நீங்க சொன்னால் அவரு கேட்பாரே!''

கமலம் கண்களில் துளித்த நீருடன் உள்ளே சென்றாள்.

மாணவர்கள் பயிற்சிகளை முடித்துக் கொண்டு சென்று விட்டார்கள். மோகன சுந்தரம் மட்டும் தனித்து அமர்ந்து காணப்பட்டான்.

''குட் மார்னிங்!''

''எஸ், கமல்! இப்படி வா!''

மோகன சுந்தரம் மேசையின் மீதிருந்த திருமண அழைப்பிதழின் ஃப்ரூபை எடுத்து நீட்டினான். மோகன சுந்தரம் என்ன சொல்லப் போகிறானோ என்று கமலம் நடுங்கினாள்.

''கமல்! சில காரணங்களை உத்தேசிச்சு நம்ம திருமணத்தைக் கொஞ்ச காலத்துக்கு ஒத்திப் போடலாம்னு நினைக்கிறேன்!''

கமலம் அண்ணாந்து பார்த்தாள்.

அவரது மனைவியும் தனது தமக்கையுமான பைரவி காலமாகிச் சில நாட்களே ஆகின்றன என்ற ஒரு காரணமில்லை, சில காரணங்களை உத்தேசித்து!

அப்படியானால் கல்யாணத்தை ஒத்திப்போட வேறு சில காரணங்களும் உள்ளனவா? அவர் வெறுத்து ஒதுக்கிய பைரவியின் தங்கை நான் என்பதை அவர் உணர்ந்து விட்டது ஒரு காரணமா? வாசலில் உட்கார்ந்திருக்கும் பார்வையற்ற பெண்ணும் அந்தச் சில காரணங்களுள் ஒன்றா?

அவளுக்குத் தெரியாத, தெரிய முடியாத இன்னொரு காரணமும் இருக்கத்தான் செய்தது.

கமலம் திருமண அழைப்பிதழ் ஃப்ரூபைப் பெற்றுப் படித்தாள். பேனாவை எடுத்தாள். 'கமலம்' என்றிருந்த வரியை அடித்துவிட்டு, அதற்குப் பதிலாக 'சீதா' என்று எழுதினாள்.

இதைக் கவனித்த மோகனசுந்தரம், ''கமல்! என்ன இது! உனக்கு என்ன பைத்தியமா?'' என்றான்.

''இல்லே. தெளிவு'' என்றாள் கமலம். கமலமாகச் சிரித்தாள்.

''எனக்கு முன்பே இங்கு சீதா வந்து விட்டாள். அந்த லட்சுமியை இங்கிருந்து வழியனுப்ப நான் விரும்பவில்லை!''

அதற்கு மேல் அவள் எதையும் பேசவில்லை; பேசிக் கொள்ளவும் விரும்பவில்லை.

வழியில் சீதா அமர்ந்து காணப்பட்டாள்.

''சீதா! என் வாழ்த்துக்கள்!''

குரல் கம்மி அடைபட்டது! நாக் குழறியது. சீதாவுக்குப் புரியவில்லை. இனிமேல்தானே மோகனசுந்தரம் புரிய வைக்க வேண்டும்!

ஜன்னல் வழியாக மோகனசுந்தரம் கலங்கிய கண்களுடன் கமலத்தைக் கவனித்தான்.

நினைவாகிய அலைகள் எங்கெங்கோ மோதிச் சிதறின.

கமலம் நடந்து கொண்டே இருந்தாள். ஒரு பயணம் முடிந்து மறு பயணத்துக்கு ஆயத்தமாகி விட்டவளைப் போல அவள் நடந்து கொண்டேயிருந்தாள்.

ஓராண்டுக்கும் மேல் சென்ற பின் சீதாவின் கழுத்தில் மூன்று முடிச்சுக்கள் விழுந்தன.






**வாழ்வின் வாசல் திறந்திருந்தாலும் செல்லத் தெரியாதவர் இவர்! மூடியிருந்தாலும் உடைத்தெறிய முற்பட்டுக் காயமடைபவர் இவர்!**

நாடக மேடையில் நகைச்சுவைக்கே பிரதான இடமளிக்கப்பட்டு வரும் இக்காலத்தில் கனமான ஒரு நாடகத்தை அரங்கேற்றியுள்ளார்கள் 'ஸ்டேஜ் ஃபிரெண்ட்ஸ்' குழுவினர்.

சமுதாயத்தில் நீண்ட காலமாகவே கேள்விக் குறிகளாக நிற்கிற பல பிரச்னைகளைத் துணிந்து அலசிப் பார்க்க முன் வந்திருக்கிறார்கள்

வசனம், கருத்துச் செறிவோடு அமைந்து கோமல் சுவாமிநாதனின் ஆற்றலுக்கு மற்றொரு சான்றாக விளங்குகிறது.

சகஸ்ரநாமம், காந்திமதி, விஜயன், மணிநாதன் போன்றவர்கள் நாடக ரசிகர்களுக்குப் பழகிய முகங்கள்தாம். அனுபவத்தில் மெருகேறிய எடுப்பான நடிப்பைக் குழுவினர் அனைவரிடமும் எதிர்பார்க்க முடியும் என்பதும் நாம் அறிந்ததே. "வாழ்வின் வாசல்" நம் நம்பிக்கையை இந்த விதத்தில் உறுதிப்படுத்துகிறது. திறமையான டைரக்‌ஷனையும் உணர முடிகிறது.

இவையெல்லாம் வரவுக் கணக்கு என்றால் பற்றுக் கணக்கும் உண்டு!

சமுதாயத்தில் புரையோடிப் போன பல பிரச்னைகளுக்கு நாடகம் அருமருந்தாக அமைய முடியும் என்பது உண்மைதான். ஆனால் பலப் பல பிரச்னைகளையும் ஒரே நாடகத்தில் இணைத்தால் அந்நாடகம் ரசிகர்களுக்கு 'ஓவர்டோஸ்' ஆகிவிடுகிற அபாயம் உண்டு!

இந்நாடகம் விதவா விவாகத்துக்கு ஆதரவு அளிக்கிறது. மதுக் கொடுமையைச் சித்திரிக்கிறது. திருமணமாகாமல் பிறந்துவிட்ட குழந்தைகளை வெறுத்து ஒதுக்குவது தவறென்றும், அவர்கள் ஒரு பாவமும் செய்யவில்லை என்றும் சுட்டிக் காட்டுகிறது. சமூகத்தில் தெய்வ சிந்தனை மிக்க பெரியவர்களாக விளங்கி ரகசியத்தில் கெட்ட வழிகளில் செல்லும் சிலரது ஆஷாடபூதித்தனத்தைச் சாடுகிறது. இன்னும் சுயநலனுக்காக மனைவியைப் பலரோடு பழகச் செய்வது, பிளாக்மெயில் செய்வது, ஒருவனைக் கொல்ல நினைத்துக் கல்யாணச் சாப்பாட்டிலேயே விஷத்தைக் கலக்க முயலும் கொடூரம், ஜோஸியத்தில் அளவுக்கு மீறி நம்பிக்கை வைப்பதால் ஏற்படும் துயரங்கள் போன்ற ஏராளமான குணக் கேடுகளைக் காட்டித் தீர்வு காண முயலும்போது ரசிகர்கள் திக்குமுக்காடித்தான் போகிறார்கள்.

இருந்தாலும் மூச்சைப் பிடித்துக் கொண்டாவது உட்கார்ந்த இடத்தை விட்டு எழாமல் கடைசிவரை இருந்து பார்த்துவிடுமாறு ரசிகர்களை ஈர்க்கும் ஒரு காந்தத் தன்மை இந்த நாடகத்துக்கு இருக்கத்தான் செய்கிறது. இத்தனை சீர்திருத்த நோக்கங்களையும் உபதேசமாகச் செய்யாமல் உருப்படியான, சுவாரஸ்யமான கதையாகப் பின்னிய கலைத் திறனைப் போற்றத்தானே வேண்டும்!

அளவான நகைச்சுவையோடு, எடுப்பான காட்சி ஜோடனைகளோடு, விறுவிறுப்பாகச் செல்கிற இந்த நாடகம் 'ஓவர்டோஸ்' தான் என்றாலும் சுசக்கவில்லையே!



# மருந்துக்கு நோய் இல்லை

வனமாலிகை

அவர்கள் இருவரும் எதிர் எதிரே ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தவாறு மௌனமாக உட்கார்ந்திருந்தனர்.

மேசையின்மீது கிடந்த பத்திரிகையின் வழுவழுப்பான அட்டையை அவள் விரல்கள் தடவிக் கொண்டிருந்தன. அவளது மோகன விழிகளில் மிதக்கும் கனவுகளைப் பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான் ராஜசேகரன்.

வாசலில் நிழல் தட்டியது.

"உள்ளே வா, வேலு" என்றான் அவன்.

ஆஸ்பத்திரிச் சிப்பந்தி வேலு ஒரு தட்டில் இரண்டு தேநீர்க் கோப்பைகளை எடுத்து வந்து மேசையின் மீது வைத்தான்.

அவள் — சௌதாமினி தட்டிலிருந்த தேநீர்க் கோப்பைகளில் ஒன்றை எடுத்து அவனிடம் நீட்டினாள்.

"நல்ல சூடு."—அவன்.

"ம்........"—அவள்.

"இன்றைக்கு உனக்கு என்ன வந்தது? காலையிலிருந்தே பார்க்கிறேன். முகத்தை 'உம்' என்று வைத்துக் கொண்டிருக்கிறாய்? சரி, சரி ஏதாவது படத்துக்குப் போகலாமா?"

"காலையில் அந்த 'டெலிவரி கேஸ்'....அதிலிருந்தே மனசுக்குச் சரியில்லே."

" நம் தொழில் அப்படி.... கையைக் கழுவுவதைப் போல் அதையும் மனசிலிருந்து கழுவிவிட வேண்டும்."

"அவள் புருஷன் அவள்மேல் உயிரையே வைத்திருக்கிறான். அவன் அழுவதைப் பார்த்தால்........."

"என்னைப் போல் என்று சொல்....." அவன் குறும்பாகச் சிரித்தான். அவளும் இலேசாகச் சிரித்துக் கொண்டாள்.

நர்ஸ் ஒருத்தி தலையை நீட்டினாள்.

"டாக்டர்! ஏழாவது பெட் நோயாளிக்கு இன்னும் நினைவு வரல்லே" என்றாள்.




"சரி, நான் வருகிறேன். நீ போ."

ராஜசேகரன் அவள் கன்னத்தில் செல்லமாகத் தட்டிவிட்டுக் கிளம்பிவிட்டான்.

அவர்கள் இருவரும் ஒரே ஆஸ்பத்திரியில் டாக்டர்கள். வாழ்க்கையிலும் இணைவதற்கான 'அரிச்சுவடி'ப் பாடம் தொடங்கிப் பல மாதங்களாகிவிட்டன.

சௌதாமினி நல்ல அழகி.

ராஜசேகரன் கம்பீரமான தோற்றம் உடையவன்.

எவ்வளவுதான் சோர்வு தட்டினாலும் அவள் நோயாளிகளின் மீது எரிந்து விழமாட்டாள். கடவுளுக்குப் பிறகு மனித உயிர்களைப் பாதுகாக்கும் கடமை உணர்ச்சிக்கு அவள் அடிமைப்பட்டிருந்தாள்.

அன்று காலையில் சௌதாமினி வந்ததும் வராததுமாக ஆர்.எம்.ஓ. அவளை அந்த டெலிவரிகேஸைக் கவனிக்கும்படி சொன்னார்.

அவளுக்கு இது இரண்டாவது பிரசவம். முதல் பிரசவம் ஸிஸேரியன் கேஸ். அவள் பிழைத்ததே கடவுள் புண்ணியம். அப்போது பெரிய டாக்டர், அவள் கணவனிடம், "மிஸ்டர்! நீங்கள் இனி குழந்தைக்கு ஆசைப்படக் கூடாது. வேண்டுமானால் ஆபரேஷன் செய்து, குழந்தை பிறக்காமல் செய்துவிடலாம்" என்றார்.

"ஆபரேஷன் வேண்டாம், டாக்டர்."

"இனிமேல் குழந்தை உண்டானால் தாயின் உயிருக்கு ஆபத்து ஏற்படும்" என்று சொல்லி அனுப்பினார்.

வாலிபப் பருவம். கோளாறு நடந்துவிட்டது.

சீனியர் டாக்டர்கள் வந்தும் அவள் உயிரைப் பிடிக்க முடியவில்லை.

அந்த நிகழ்ச்சி சௌதாமினியின் மனத்தைக் குட்டையாகக் கலக்கிவிட்டது.

ராஜசேகரன் திரும்பி அங்கே வந்தபோது அவள் இல்லை.



வழக்கமாக அவனிடம் சொல்லிவிட்டுப் புறப்படும் அவள், அன்று கார் வந்ததும் புறப்பட்டுவிட்டாள்.

ஊரிலிருந்து சௌதாமினியின் அப்பா கடிதம் எழுதியிருந்தார். பழைய பல்லவி தான். அவள் வேலையை விட்டுவிட்டு ஊருக்கு வர வேண்டும். சொந்தமாக வைத்தியசாலை தொடங்க வேண்டும்.

'ம்... கல்யாணம் முடியட்டும். நாங்களே சொந்தத்தில் வைத்தியசாலை தொடங்கத் திட்டம் போட்டுள்ளோம்.' — இப்படி அவள் மனத்துக்குள் நினைத்துக் கொண்டாள்.

"அம்மா! யாரோ உங்களைப் பார்க்க வந்திருக்கிறாங்க." — வேலைக்காரி தகவல் கொடுத்தாள்.

"உட்காரச் சொல். வருகிறேன்."

சௌதாமினி முன் பக்கம் வந்தாள். இளம் பெண் ஒருத்தி இரு கைகளையும் குவித்து வணங்கினாள். எளிமையான தோற்றம் — களையான முகம்.

"என்னம்மா, அப்படி உட்கார்" என்றாள் சௌதாமினி.

அவள் உட்காரத் தயங்கினாள்.

"பரவாயில்லை, சும்மா உட்கார்."

அவள் தயங்கித் தயங்கிப் பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்தாள்.

"உன் பெயர் என்ன?"

"மீனு."

"மீனு! நான் வீட்டில் யாருக்கும் சிகிச்சை செய்வதில்லை. நாளைக் காலையில் ஏழு மணிக்கு ஆஸ்பத்திரிக்கு வா."

"அதற்கில்லை டாக்டர்."

"உனது உறவினர் யாராவது ஆஸ்பத்திரியில் இருக்காங்களா?"

"இல்லை."

"பின்னே?......"

"டாக்டர் ராஜசேகரன் . . . ."

"ஆமாம், அவருக்கென்ன.....?" அவள் குரல் பதறி நடுங்கியது.

"அவருக்கும் எனக்கும் திருமணம் நிச்சயமாகி இரண்டாண்டுகளாகிவிட்டன."

சௌதாமினி அதிர்ச்சியிலிருந்து விடுபடச் சில நிமிஷங்கள் பிடித்தன. படித்தவள் — ஓரளவு தன்னைச் சமாளித்துக் கொண்டாள்.

"அவர் ஹவுஸ் சர்ஜனாக இருக்கும்போது எங்கள் திருமணம் நிச்சயிக்கப்பட்டது. நிச்சயதார்த்த சமயத்தில் எங்கள் வழக்கப்படி மாப்பிள்ளை வீட்டார் போட்ட மோதிரம் இது." — வலது கை மோதிர விரலைக் காட்டினாள். மோதிரத்தில் எஸ். ஆர். என்ற எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருந்தன. எஸ். ராஜசேகரன்.

"அப்போது உங்கள் கல்யாணம் ஏன் நடக்கவில்லை?"

"வேலை கிடைக்கட்டும் என்றார்."

"ம்......"

"நான் கிராமத்தில் பிறந்து வளர்ந்தவள். எங்கள் குடும்பம் பழைய ஆசாரத்தில், பழக்க வழக்கங்களில் ஊறியது."

"டாக்டர் இப்போ என்ன சொல்கிறார்?"

"நிச்சயதார்த்தம் மட்டும்தானே நடந்தது? அதனால் ஒன்றும் குடி முழுகிப் போகாது. வேறு மாப்பிள்ளை பார்த்துக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கட்டும். நான் என்னோடு வேலை பார்க்கும் ஒருத்தியைக் கல்யாணம் பண்ணிக்கப் போறேன் என்கிறார்."

"அதற்கு உனக்கு விருப்பமில்லையா?"

"எங்கள் ஊர் வழக்கப்படி நிச்சயதார்த்தம் நடந்த பிறகு ஒரு பெண்ணைப் பிள்ளை வீட்டார் வேண்டாம் என்று சொல்லி விட்டால் அவளைப் பிறகு யாருமே கட்டிக்க மாட்டாங்க."

மீனுவின் குரல் கம்மியது.

"டாக்டர், உங்களையே அவர்...." பாதியில் அறுந்து விழுந்தன வார்த்தைகள்.

டாக்டர் சௌதாமினியின் பார்வை ஜன்னல் வழியாகச் சூனியத்தை மேய்ந்தது.

"எங்கள் கல்யாணம் நடக்கவில்லையானால் எங்கள் குடும்ப கௌரவம் அழிந்து போகும். என் தங்கைகள் இருவருக்குக் கல்யாணம் நடக்க வேண்டியதிருக்கிறது."

மீனுவின் கண்களிலிருந்து நீர் சொட்டியது.

அடித்து வைத்த சிலையாகச் சௌதாமினி இருந்தாள்.

"டாக்டர்! உங்களை அவர் கல்யாணம் பண்ணிக் கொள்வதில் எனக்கு எதிர்ப்பே இல்லை. ஆனால் என்னை அவர் கல்யாணம் செய்து கொள்ளட்டும். எட்டு நாட்களுக்குள் எப்படியாவது நான் செத்துப் போகிறேன். என் சாவைப் பற்றி யாருக்கும் சந்தேகம் வராதபடி நான் பார்த்துக் கொள்கிறேன். அதன் பிறகு உங்கள் விருப்பப்படி நீங்கள் கல்யாணம் பண்ணிக் கொள்ளலாம்."

சௌதாமினி அவளை நிமிர்ந்து பார்த்தாள்.

"எனக்காக மட்டும் நான் உங்களிடம் மன்றாடவில்லை டாக்டர். எங்கள் குடும்ப கௌரவம்.... பூத்துக் குலுங்கவிருக்கும் என் தங்கைகளின் வாழ்வு......."

மீனு விம்மி விம்மி அழுதாள். அவளைப் பார்ப்பதற்கே பரிதாபமாக இருந்தது.

"மீனு! உன்னுடைய மனக் கஷ்டம் எனக்குப் புரிகிறதம்மா. ஆனால்......" அவள் கீழுதட்டைப் பற்களால் கடித்துக் கொண்டாள். பொங்கி வெடிக்க இருக்கும் வேதனையை நசுக்குவதாக இருந்தது அது.

வேலைக்காரி எட்டிப் பார்த்தாள்.

"குடிக்க ஏதாவது வேணுமாம்மா?"

"வேண்டாங்க, டாக்டர்."

"பெண்ணாகப் பிறக்கத் தவம் செய்ய வேண்டும் என்பார்கள். பெண்ணாய்ப் பிறந்தால் அதிலுள்ள கஷ்டங்கள் அவர்களுக்கு எங்கே தெரியப் போகிறது?" — விரக்தியாகச் சிரித்துக் கொண்டாள்.

மீனு வெறி பிடித்தவளைப் போல் எழுந்து சென்று சௌதாமினியின் கைகளைப் பிடித்துக் கொண்டாள்.

"டாக்டர்! 'பின்னால் தற்கொலை செய்து கொள்வதாகச் சொல்கிறவள் இப்போது செய்து கொண்டால் என்ன' என்று நீங்கள் நினைக்கலாம். செய்தி ஊர் முழுவதும் பரவி விட்டது. நான் இப்போது போய்விட்டால் எங்கள் குடும்பத்தின் மீது தீராத களங்கம்












# மைக்ரோஃபைன்ட்

# ஆஸ்ப்ரோ

## அதிவேகமாகக் கரைந்து, அதிவேகமாகக் கிரகிக்கப் படுகிறது. அதனால்தான் அது அதிவேகமாக வலியைப் போக்கி விடுகிறது—

சாதாரண வலிநிவாரண மாத்திரைகளைவிட இருமடங்கு அதிக வேகத்துடன் வலியைப் போக்கி விடுகிறது.




பெரிய அணுக்கூறுகள். மெதுவாகக் கிரகிக்கப்படுகின்றன
தாமத நிவாரணம்




நுண்ணிய அணுக்கூறுகள். விரைவில் கிரகிக்கப்படுகின்றன
அதிவேக நிவாரணம்



சாதாரண மாத்திரைகளைப் போலன்றி, ஆஸ்ப்ரோவின் நுண்ணிய அணுக்கூறுகள் அதிவேகமாகக் கிரகிக்கப் படுகின்றன. வலியின் இருப்பிடத்தை அதிவேகமாக அடைகின்றன. உங்களுக்கு அதிவேக நிவாரணம் அளிக்கின்றன.

கீழ்க்கண்டவைகளுக்கு மைக்ரோஃபைன்ட் ஆஸ்ப்ரோ சாப்பிடுங்கள்: தலைவலி • உடல் வலி • ஜலதோஷம் • ஃப்ளு • மூட்டுவலி • தொண்டை அழற்சி • பல்வலி

சாப்பிடும் அளவு: வயது வந்தவர்கள்: இரண்டு மாத்திரைகள். தேவைப் பட்டால் மீண்டும் சாப்பிடவும். குழந்தைகள்: ஒரு மாத்திரை அல்லது உங்கள் டாக்டர் சொற்படி

**ஆஸ்ப்ரோ** மட்டுமே **மைக்ரோஃபைன் செய்யப் படுகிறது, அதிவேகமாக வலியை வெளியே இழுப்பதற்காக.**

நிகோலஸ் (N) தயாரிப்பு

A G.57 TH

ஏற்பட்டுவிடும். வெளியே தலைகாட்ட முடியாது. எனக்கு வழிசொல்லுங்கள் டாக்டர்.''

சௌதாமினி அவளை ஆசுவாசப்படுத்திப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டாள்.

''நீ தனியாகத்தான் வந்தாயா?'' என்று கேட்டாள்.

''இல்லை. துணைக்கு அப்பாவும் வந்தார். இங்கே வர விரும்பவில்லை. பஸ் ஸ்டாண்டில் நிற்கிறார்.''

''மீனு! உன் நிலைமை எனக்குப் புரிகிறதம்மா. டாக்டர் என்னிடம் இதைப் பற்றிச் சொல்லவே இல்லை. நோய்க்குத்தான் மருந்து..... மருந்துக்கு நோய் இல்லை.''

''தெய்வத்துக்கு மேலாக உங்களையே நம்பி வந்துவிட்டேன் டாக்டர். என் கல்யாணம் நடக்கவில்லையானால், எங்கள் குடும்பம் ஒரு நாள் இரவு அழிந்தே போகும்.''

''கவலைப்படாதே மீனு, நானோ, நீயோ நினைத்தபடி எதுவும் நடந்துவிடாது. நமக்கு மேலாகத் தெய்வம் ஒன்று இருக்கிறது. நீ எனக்குச் சத்தியம் பண்ணிக் கொடுக்க வேண்டும்.''

''ஒரு வாரத்துக்குள் தற்கொலை பண்ணிக் கொள்வேன் என்றுதானே டாக்டர்......? தெய்வ சந்நிதியில்கூட சத்தியம் பண்ணித் தரத் தயாராக இருக்கிறேன்.''

''அசடே, நான் அவ்வளவு சுயநலக்காரி என்று நினைத்துவிட்டாயா? நீ தற்கொலை பண்ணிக் கொள்வதில்லை என்று சத்தியம் பண்ணித் தர வேண்டும். உங்கள் தாம்பத்திய வாழ்க்கை மகிழ்ச்சியாக இருக்கவேண்டும்...''

மீனுவின் கன்னத்தில் வடிந்த நீரைத் துடைத்தாள் அவள்.

மீனு எழுந்தாள்.

''தைரியமாகப் போம்மா. நல்லவர்களுக்கு ஒருநாளும் தீங்கு வராது. நான் ஒருத்தி இருப்பதை நீ மறந்துவிடாதே.''

''அக்கா.....!'' மீனு நன்றியுடன் அவள் கைகளைப் பற்றிக் கொண்டாள்.

''அப்பா காத்திருப்பார்; சீக்கிரம் போ.''

மீனு விடைபெற்றுக் கொண்டாள்.

மடை திறந்த வெள்ளமாகச் சௌதாமினியின் கண்களிலிருந்து நீர் வடிந்தது. அதைப் புறங் கையால் அலட்சியமாகத் துடைத்தெறிந்தாள் அவள்.

ராஜிநாமாக் கடிதம் எழுதிய கையோடு, ராஜசேகரனுக்கும் அவள் ஒரு நீண்ட கடிதம் எழுதத் தொடங்கினாள்.



## ஹாக்கியில் குத்துச் சண்டை!

■ அண்மையில் நடந்த சேப்பாக்கம் ஹாக்கிப் போட்டியின்போது சிக்னல் கோஷ்டியினரும் சீக்கிய ரெஜிமெண்டும் ஆட்டத்தை ஆடுவதை விட்டு ஒருவரை யொருவர் 'ஸ்டிக்'கினால் தாக்கிக் கொண்டனர். அம்பயர் பலரை வெளியே அனுப்பி அமைதியை நிலைநாட்டினார். இம்மாதிரி சம்பவம் எம். ஸி. ஸி. போட்டிகளில் மிக அரிது. ஒரு தடவை எம்.ஸி.ஸி. ஹாக்கிப் போட்டியின்போது பெங்களூர் இந்தியன் குழுவைச் சேர்ந்த கிருஷ்ணனும் டெலிகிராப் குழுவைச் சேர்ந்த பிலிப்ஸும் குத்துச் சண்டையில் இறங்கி விட்டனர். உடனே ஹாக்கி ரஸிகர்கள் மைதானத்துக்குள் பாய்ந்தனர். பந்தயம் நிறுத்தப்பட்டு விட்டது. மறு ஆட்டம் (Replay) நடந்தபோது போலீஸார் ரஸிகர்களை மாட்சைக் காண அனுமதிக்கவில்லை! ரஸிகர்கள் இல்லாமலே ஆட்டம் முடிவுற்றது.

ஆதாரம்: எம். ஸி. ஸி. ஹாக்கி மலர்

## 'டக்'கின் பெருமை!

■ நியூ ஸவுத் வேல்ஸ் கிரிக்கெட் ஆட்டக்காரர் ஏ. ஆர். மோரிஸ் முதல்தர கிரிக்கெட் பந்தயங்களில் தொடர்ந்து நூறு இன்னிங்ஸ்களில் எண்ணிக்கை எடுக்காமல் இருந்ததில்லை. ஆனால் தென் ஆப்பிரிக்காவுக்கு எதிராக 1949 - 50ம் ஆண்டில் ஆடிய போது முதல் டெஸ்டில் மோரிஸின் நூற்றியோராவது இன்னிங்ஸ் 'டக்'கில் முடிந்தது!

■ 1878ம் ஆண்டில் ஓவலில் இங்கிலாந்துக்கு எதிராக ஆடிய ஆஸ்திரேலியர்கள் ஒரே இன்னிங்ஸில் ஏழு 'டக்'கள் எடுத்துப் 'புகழ்' பெற்றனர்! ஆனால் அதே வருஷம் லார்ட்ஸில் எம். ஸி. ஸி. குழுவினரையும் ஏழு 'டக்' போட வைத்த பெருமை ஆஸ்திரேலியர்களைச் சாரும்.

■ ஒரு முறை ஆஸ்திரேலியாவின் ஸிட் பார்ன்ஸ் 'டக்' எடுத்துவிட்டு, பவிலியனுக்குச் சதம் எடுத்த ஆட்டக்காரர்போல் நடந்து வந்தார். ரொம்பச் சிரமப் பட்டு ஆடியதால் வியர்வை முகத்தில் வழிவதாகப் பாவனை செய்து கொண்டு, தம் பட்டுக் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டார். மைதானத்துக்குள் சென்று கொண்டிருந்த டிரிங்க் வெயிட்டரிடமிருந்து ஒரு டம்ளர் நீர் எடுத்து அருந்தினார். பெவிலியனை நெருங்கியதும் தலைக் குல்லாயை எடுத்துக் கைதட்டலுக்கு நன்றி கூறுவதுபோல் ஆட்டிவிட்டு உள்ளே சென்றார்!

★

— 1973 எம். ஸி. ஸி. ஹாக்கிப் போட்டிக்காக வெளியிடப் பட்ட மலரில் திரு வி. பட்டாபிராமன் எழுதிய கட்டுரையிலிருந்து.

★

தகவல்:
பி. எஸ். எம்.






## 14. பேட்டிக்குப் போட்டி

சென்னை நகரின் தென்மேற்கு எல்லையோரம் ஒரு மலையடிவாரத்தையொட்டி அமைந்திருந்தது 'பைப் பாரத்' என்னும் அந்தக் குழாய் உற்பத்தி நிறுவனம். அது பெரியதுமல்ல, சிறியதுமல்ல; நடுத்தரமான கம்பெனி. ஆரம்பித்து ஐந்தாறு வருடங்களே ஆகின்றன. சுமார் எழுநூறு பேர்கள் வேலை செய்கிறார்கள்.

அந்தக் கம்பெனி இருக்கும் இடத்துக்குச் செல்ல மின்சார ரயில், பஸ் முதலான போக்குவரத்துச் சாதனங்கள் இருந்தாலும் அவற்றிலிருந்து இறங்கிக் கிட்டத்தட்ட ஒரு மூன்று பர்லாங்கு தூரம் நடந்தே ஆக வேண்டும். இதற்கென்று பிரதான சாலையிலிருந்து கிளைப் பாதை ஒன்றும் போடப்பட்டிருந்தது.

பஸ்ஸை விட்டு இறங்கிய நரசிம்மன் அந்தப் பாதையில் திரும்பி நடந்தான். தொலைவிலிருந்து பார்க்கும்போதே கம்பெனியின் காரியாலயக் கட்டடம் தெரிந்தது. அதற்குப் பின்னால் சற்று உள்ளே தள்ளித் தொழிற்சாலைக் கட்டடங்களும் தென்பட்டன. எல்லாம் சேர்ந்து அந்த நிறுவனம் அமைந்திருக்கும் நிலப் பரப்பு சுமார் பத்து ஏக்கர் இருக்கலாம். அதன் சுற்றுவட்டாரத்தில் குடியிருப்பு வீடுகள் அதிகமாக இல்லை. அங்கொன்றும் இங்கொன்றுமாகச் சில பங்களாக்களும், ஓட்டு வீடுகள் சிலவும் காணப்பட்டன. மற்ற இடமெல்லாம் வெட்டவெளியாகவே கிடந்தது. இதனால் நடமாட்டமும் அதிகம் இல்லை.

தன் கைக் கடிகாரத்தில் மணியைப் பார்த்தான் நரசு. பத்தாகி ஓர் ஐந்து நிமிடம் கடந்திருந்தது. 'நேரம் நெருங்கிவிட்டதே' என்று முணுமுணுத்தவனாய்க் கால்களைச் சற்று எட்டிப் போட்டு நடக்கலானான்.

வெறிச்சோடிக் கிடந்த அந்தப் பாதையில் வெகு வேகமாய் வந்த ஒரு போலீஸ் லாரி கம்பெனியை நோக்கி விரைந்தது. லாரி நிறையப் போலீஸார் இருப்பதும் தெரிந்தது. வேறு ஏதோ சிந்தனையில் இருந்த நரசு அதைப் பார்த்தும் பாராதவனாய் மேலே நடந்தான். அந்தக் கம்பெனியின் காரியாலயத்தை அடைய இன்னும் ஒரு பர்லாங் தூரம் நடந்தாக வேண்டும்.

பாதை ஓரங்களிலும் வெட்டவெளியிலும் ஆங்காங்கே வளர்ந்து நின்ற புளிய மரங்களின் நிழலில் கும்பல் கும்பலாகச் சிலர் உட்கார்ந்து கொண்டும் நின்று கொண்டும் இருப்பதை இப்போதுதான் அவன் கவனித்தான். அருகில் செல்லச் செல்ல இன்னும் அதிகமான பேர் இருப்பது புலனாயிற்று. சற்று முன்னால் சென்ற போலீஸ் லாரி கம்பெனிக்கு எதிரே போய் நிற்க, அத்துடன் ஏற்கனவே இரண்டு லாரிகளும் அங்கு நின்றிருந்தன.

இந்தக் காட்சிகளைக் கண்ட நரசு வியப்பும் திகைப்பும் அடைந்தவனாய்த் தன் நடை வேகத்தைக் குறைத்து அங்குமிங்கும் பார்த்தவாறு சென்றான். இப்போது நூற்றுக்கணக்கான தொழிலாளர்களும் காரியாலய ஊழியர்களும் மரத்தடிகளில் கூட்டம் கூட்டமாகக் குழுமியிருப்பதை அவனால் தெளிவாகக் காண முடிந்தது. அவர்களில் சிலர் ஏதேதோ கோரிக்கைகள் எழுதப்பெற்ற அட்டைகளை ஏந்திப் பிடித்திருந்தனர். கம்பெனியின் வாயிலிலிருந்து சுமார் ஐம்பது கெஜ தூர எல்லைக்குள் எவரையும் நுழைய விடாமல் போலீஸார் தடுத்து நிறுத்திக் கொண்டிருப்பதையும் அவன் கண்டான். அதனால் மேலே செல்லாமல் தயங்கி நின்றுவிட்டுப் பின் ஒரு புளிய மரத்தடியை நோக்கி நடந்தான். அங்கு போன சில விநாடிகளிலேயே அவனுக்கு விஷயம் ஒருவாறு விளங்கிவிட்டது.

அந்தக் கம்பெனியின் ஊழியர்கள் கடந்த நான்கு தினங்களாக வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள்!

இவ்விவரம் அறிந்து சப்தநாடியும் ஒடுங்கிப் போனவனாய், மரத்தடியில் கிடந்த ஒரு பாறைக் கல்லின் மேல் அப்படியே சோர்ந்து துவண்டு உட்கார்ந்து விட்டான் நாசு. அவனால் கொஞ்ச நேரம் எதைப் பற்றியுமே சிந்திக்க முடியவில்லை. மூளை நரம்புகளெல்லாம் மரத்து விட்டாற் போன்றதோர் உணர்ச்சி. தன்னுடைய துரதிர்ஷ்டத்தை எண்ணிச் சிரிப்பதா, அழுவதா என்றும் தோன்றாமல் தலையைத் தாங்கிப் பிடித்தபடி கல்லோடு கல்லாய்ச் சமைந்து உட்கார்ந்துவிட்டான் அவன். அந்தக் கம்பெனியில் நடைபெறும் வேலைநிறுத்தம் சம்பந்தமாக யாரிடமாவது மேலும் விவரங்களை விசாரித்து அறியலாம் என்று கருதிச் சுற்றுமுற்றும் பார்த்தான். பின்னால் யாரோ இருவர் அவ்விஷயமாய் ஏதோ பேசிக் கொண்டிருப்பதைக் கேட்டு, அவர்களைத் திரும்பிப் பார்க்காமலே, அவர்கள் பேசுவதை மட்டும் கவனமாகச் செவிமடுக்கலானான்.

"ஏன் சார், இந்த வேலைநிறுத்தம் இன்னும் எத்தனை நாட்களுக்கு நடக்குமாம்?"

"யாருக்குத் தெரியும்? ஆண்டவனைத் தான் கேட்கணும்."

"அப்படீன்னா, ஆண்டவன்தான் இந்த வேலைநிறுத்தத்தைச் செய்யச் சொன்னாரு சார்?"

கேள்வி கேட்ட ஆளும், பதில் சொன்ன நபரும் சிரிக்கலே. நாசுவுக்கும் சிரிப்பு வந்துவிட்டது. மேலும் அவர்கள் பேசுவதைக் கவனித்தான்.

"எதற்கு சார், வேலைநிறுத்தம் பண்ணியிருக்கிறாங்க?"

"என்னய்யா இது கேள்வி! பண்ண வேண்டியதுக்குத்தான் பண்ணியிருக்கிறாங்க."

"நான் கேட்கிறது அதில்லே சார்! வழக்கமான கோரிக்கைகளுக்கா, அல்லது வேறே எதற்காச்சுமா?"

"வேறு எதற்குச் செய்வாங்களாம்?"

"கோபிச்சுக்காம இருந்தால் சொல்றேன்!..... போன வாரம் ஒரு காஸ் சிலிண்டர் தயாரிப்புக் கம்பெனியிலே வேலைநிறுத்தம் நடந்தது. எதற்குன்னு, அந்தக் கம்பெனியில் ரெண்டு லேபர் யூனியன்கள் உண்டு. அந்த ரெண்டு யூனியன் தலைவர்களுக்கும் போட்டாப் போட்டி. ஒருத்தர் ஒரு மந்திரியின் மச்சினனோட மகள் கல்யாணத்துக்குத் தொழிலாளர்கள் போய் வர ஒரு நாள் லீவு வேணும்னு கோரிக்கை விட்டார்; இன்னொருத்தர் அதே நாளில், தாம் சார்ந்த அரசியல் கட்சித் தலைவர் ஒருவரின் பிறந்த நாளுக்கு அவரைப் போய்ப் பார்த்து மாலை போட்டு மரியாதை செய்ய லீவு விடும்படி வேண்டினார். கம்பெனி நிர்வாகத்தினர் இந்த ரெண்டு கோரிக்கைகளையுமே நிராகரிச்சுட்டாங்க. மறு நாள் ரெண்டு யூனியன் தலைவர்களும் ரொம்ப ஒற்றுமையாச் சேர்ந்து வேலைநிறுத்தம் செய்யும்படி தொழிலாளர்களுக்குக் கட்டளை போட்டு விட்டாங்க. தங்கள் தலைவர்கள் சொன்னபடி தொழிலாளர்களும், 'முதலாளித்துவம் ஒழிக! உலகப் பாட்டாளிகளே, ஒன்று படுங்கள்! சுரண்டலற்ற சோஷலிஸ சமுதாயம் வாழ்க!'ன்னு அட்டை எழுதிப் பிடிச்சுக்கிட்டு வெளியே நின்னுட்டாங்க......"

"அப்புறம் என்ன ஆச்சு?"

"பேச்சு வார்த்தை நடந்தது. ஆறு நாட்களுக்கப்புறம் ஒரு தினுசா சமரசம் ஏற்பட்டது."

"தொழிலாளர்களுக்கு வெற்றி தானே?"

"வெற்றி தான். மந்திரியோட மச்சினனின் மகளுக்குப் பிறக்கப் போகிற பிள்ளைக்குப் பெயர்சூட்டு விழா அன்னிக்கு ஒரு நாளும், கட்சித் தலைவரோட மாமியார் செத்த நினைவு தினத்துக்கு ஒரு நாளும் லீவு விடறதா ஒப்புத்துக்கிட்டது கம்பெனி நிர்வாகம் — ஒரு சின்ன நிபந்தனையோடு."

"அது என்ன நிபந்தனை?"

"வேலைநிறுத்தம் செய்த ஆறு நாட்களுக்குக் கூலி கிடையாது என்கிற நிபந்தனை! யூனியன் தலைவர்களும் அதை ஏற்றுக்கிட்டாங்க. தொழிலாளர்களும், 'வெற்றி, வெற்றி'ன்னு கோஷம் போட்டுத் தலைவர்களுக்கு மாலை சூட்டி ஊர்வலமா அழைச்சுப் போய் வீட்டிலே



விட்டுட்டு ரொம்பச் சந்தோஷமா வேலைக்குத் திரும்பிட்டாங்க."

பேசிக் கொண்டிருந்தவர்கள் சிரிக்கவில்லை; அவர்கள் பெருமூச்சு விடும் ஒலிதான் கேட்டது.

'' இந்த மாதிரியான கோரிக்கை எதற்காவது இங்கேயும் வேலைநிறுத்தம் நடக்குதோன்னுதான் கேட்டேன், சார் !''

'' அதெல்லாம் இல்லே. எங்கள் கோரிக்கைகள் எல்லாம் நியாயமானவை. சம்பள உயர்வு, லாபத்தில் நாற்பது சதவிகித போனஸ், வேலையிலிருந்து நீக்கப்பட்ட ஐந்து தொழிலாளர்களையும், ஒரு துணைக் கணக்காயரையும் மறுபடியும் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்ற இந்த மூன்றும்தான்.''

'' என்ன சார், சொன்னீங்க ? துணைக் கணக்கு அதிகாரியா ?... அதாவது, அசிஸ்டெண்ட் அகவுன்டெண்ட்?''

''ஆமாம்.''

'' அவரை எதற்கு சார், வேலையிலிருந்து நீக்கிறாங்க ?''

'' பலரும் பலவிதமாய்ச் சொல்றாங்க. எனக்கு எதுவும் சரியாகத் தெரியலே.''

''இந்தக் கம்பெனியில்தானே வேலை பார்க்கிறீங்க ?''

''ம்ம்......''

'' தொழிற்சாலையிலா, அல்லது ஆபீஸிலா சார் ?''

''அகவுன்ட்ஸ் டிபார்ட்மென்டிலே சீனியர் கிளார்க்காயிருக்கிறேன் !''

''ஓ....நீங்க பிறந்து வளர்ந்ததெல்லாம் மெட்ராஸில்தானே சார் ?''

''என்னத்துக்கய்யா இந்தக் கேள்வி?''

'' சார்! கோபிக்கக்கப்படாது..... மெட்ராஸிலே பிறந்து வளர்ந்தவங்களாலேதான் இப்படி இருக்க முடியும்.''

'' எப்படி இருக்கிறேனும் ?''

'' அதாவது, மெட்ராஸ்காரங்களுக்குப் பக்கத்து வீட்டுக் குடித்தனக்காரன் பாடையேறிப் போறதுகூடத் தெரியாதாம் ; தெரிஞ்சுக்கவும் மாட்டாங்களாம். அது மாதிரி நீங்களும், அகவுன்ட்ஸ் டிபார்ட்மென்டிலே சீனியர் கிளார்க்காயிருந்துகிட்டே ஓர் அசிஸ்டெண்ட் அகவுன்டென்டை வேலையிலிருந்து நீக்கினது ஏன்னு தெரியாது என்கிறீங்களே!......''

அசட்டுச் சிரிப்பும் குறும்புச் சிரிப்பும் ஒருமித்து ஒலித்தன. நரகவும் தனக்



குள் நகைத்துக்கொண்டான். ஆயினும் அவ்விரு பேர்வழிகளைப் பின்னால் திரும்பிப் பார்த்தால் அவர்களின் பேச்சு திசை மாறிவிடும் என்று கருதிப் பார்க்காமலே உட்கார்ந்திருந்தான். அவர்களுடைய பேச்சிலிருந்து பல விவரங்கள் அவனுக்குப் புலனாகிக் கொண்டிருந்தன.

''வேர்க்கடலை! வறுத்த வேர்க்கடலை! சூடான வேர்க்கடலை!'' என்று கூவிக் கொண்டே கையில் ஒரு சின்னக் கூடையுடன் அங்கு ஓடி வந்தான் சிறுவன் ஒருவன்.

'' இங்கே வாடா, தம்பி!'' என்று பின்னாலிருந்த 'கேள்விநாதன்' குரல் கொடுத்தான். ''நீ ஒருத்தன்தாண்டா இந்த நாட்டுக்கு உருப்படியான சேவை செய்யறே!..... இந்தா, இருபது காசுக்குப் போடு!''

''போதுமா சார்? சரி, பிடியுங்க!'' என்று பையன் வேர்க்கடலையை அளந்து போட்டுக் காசு வாங்கிக் கொண்டு, வெகு சுறுசுறுப்புடன் இன்னொரு மரத்தடியை நோக்கி ஓடினான்.

''இந்தாங்க, சார்! சும்மா உட்கார்ந்திருக்கிறீங்களே, நீங்களும் நாலு கொறியுங்க!'' என்றவாறுதான் வாங்கிய வேர்க்கடலையைப் பங்கு போட்டுப் 'பதில்நாத'ருக்கும் விநியோகித்தான். பிறகு, ''ஏன் சார், நேத்திக்குச் சாயந்திரம் இந்தக் கம்பெனியின் ஆட்கள் ஊர்வலமா வந்த போது என்னமோ கலாட்டா நடந்ததாமே? ஒரு லோகல் நியூஸ் பேப்பர்லே படிச்சேன்; நிஜம்தானா?'' என்று வேர்க்கடலையை 'நசக், நசக்'கென்று மென்று கொண்டே கேட்டான் கேள்விநாதன்.

''ஓ... அதுவா? வாஸ்தவம்தான்.''

''என்ன சார் அது கலாட்டா?''

''பெரிசா ஒண்ணுமில்லே! இந்தக் கம்பெனி டைரக்டர்களில் ஒருத்தரோட வீட்டுப்பக்கம் ஊர்வலம் வரச்சே, மேலே போகாமல் அங்கேயே நின்னு கோஷம் போட்டாங்க. சில தொழிலாளர்கள் வீட்டுக் காம்பவுண்டுக்குள்ளே நுழையவும் முயற்சி பண்ணினாங்க. கூட வந்த போலீஸார் உடனே தலையிட்டு அவங்களைச் சமாதானப்படுத்தி வெளியே கொண்டு வந்து விட்டாங்க. பார்க்கப் போனால், எங்க ஆட்கள் அம்மாதிரி செய்தது சுத்தப் பைத்தியக்காரத்தனம்னுதான் சொல்வேன். ஏன்னா, அந்த மனிதர் இந்தக் கம்பெனியின் டைரக்டர்கள் போர்டிலே ஓர் அங்கத்தினர்தானே தவிர அவருக்கும் நிர்வாகத்துக்கும் ஒரு சம்பந்தமுமில்லே. இதைச் சொன்னால் நம்மையே அடிக்க வரான்கள் .....''

இப்படிச் சலிப்புடன் சொல்லிக் கொண்டு வந்த 'பதில்நாதர்' உடனே, ''அது சரி; நீங்க எதற்கு இங்கே வந்திருக்கீங்க?'' என்று கேட்டார்.

''நானா?.... ஒண்ணுமில்லே சார்! இங்கே என்னமோ கூட்டமா இருக்கிறாங்களே, சும்மா வேடிக்கை பார்த்துட்டுப் போகலாமின்னு வந்தேன்'' என்று சிரித்துக் கொண்டே மழுப்பினான் கேள்விநாதன். அவன் சொன்னது உண்மையல்ல என்பது அவனுடைய சிரிப்பிலிருந்து புலனாயிற்று.

பதில்நாதர் தம் சகாக்கள் இருந்த வேறோர் இடத்தை நோக்கிச் செல்லவே, நரசு எழுந்து மெல்லப் பின்னால் திரும்பிப் பார்த்தான். இவ்வளவு நேரம் அங்கு நின்று கேள்விக்கணைகளாகத் தொடுத்துக் கொண்டிருந்த கேள்விநாதனும் அவனைக் கூர்ந்து நோக்கினான்.

''அடே! அடே!.... நீ நீ.... திருமலை இல்லே?.....''

'' ஆ.....! ஓ.....! நரசிம்மன்.... நரசு......''

இரைந்து கூவிக்கொண்டே இருவரும் ஓடி வந்து ஒருவரையொருவர் கட்டித் தழுவிக் கொண்டனர்.

'' என்ன நரசு! நீ எப்படி இங்கே வந்தே......? அதாவது, நீ எதற்கு இங்கே....? ஆங்.... இன்னும்கூட என் கண்களை என்னால் நம்ப முடியவில்லையே!'' என்று மகிழ்ச்சித் திணறலுடன் குழறிக் கொண்டே பின்னால் நகர்ந்து அவனை மேலும் கூர்மையாகப் பார்த்தான் திருமலை என்ற அந்த வாலிபன்.

''சந்தேகப்படாதே! நான் நரசுவே தான். வா, இப்படி உட்கார்ந்து பேசுவோம்.'' — இருவரும் அந்தப் பாறைக் கல்லின் மேல் போய் அமர்ந்தனர்.

திருமலைக்கு வயசு இருபத்தேழு அல்லது இருபத்தெட்டுதான் இருக்கும். ஆனால் இதற்குள் அவனுடைய தலை இலேசாக நரை கண்டு விட்டிருந்தது. அது பித்த நரைதான். ஒல்லியான உருவம்; வெளுத்த மேனி; நீண்ட

# எந்தப் பெண்ணிற்கு அவள் தாய் இன்க்ரிமின்* கொடுக்கிறாள் என்று சொல்லுங்கள் பார்க்கலாம்!

உங்கள் ஊகம் சரிதான்!



டிராப்ஸ்—
2மாதம் முதல் 2 வயது வரை யுள்ள குழந்தைகளுக்கு.

ஸிரப்—
14 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு.

அடேயப்பா!
வளரும் குழந்தைகளுக்கு விசேஷ டானிக்

# இன்க்ரிமின்* டானிக்

**அதிகப்படி உணவை அதிகப்படி வளர்ச்சியாக மாற்றுகிறது**




டாக்டர்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமான பெயர் Lederle

ஸையனமைட் இந்தியா லிமிடெட்டின் ஒரு பிரிவு

* அமெரிக்கன் ஸையனமைட் கம்பெனியின் ரிஜிஸ்டர்டு டிரேட் மார்க்

SISTA'S-INC-1011 TAM

# இறுதியாக—செயற்கை இழைத் துணிகளுக்கு ஒரு வெண்மை தரும் சாதனம்

# டினோபால்®-எஸ்

டெரீன்®, 'டெரீன்'/காட்டன், நைலான் முதலான துணிகளுக்கு வெண்மை தருகிறது

# Tinopal®-S

உங்களது செயற்கை இழை மற்றும் கலப்பு இழைத் துணிகளை சலவை செய்த பிறகு கடைசியில் அலசுவதற்கு முன், தண்ணீரில் சிறிது டினோபால்-எஸ் சேர்க்கவும். உங்கள் வெள்ளைத் துணிகளில் சிறந்த வெண்மை பளிச்சிடும். டினோபால்-எஸ்ஸின் திறனால் தடவைக்கு தடவை வெண்மை மிளிரும்!

**இன்றே டினோபால்-எஸ் வாங்குவீர்**




## டினோபால்®-எஸ்

### செயற்கை இழைத் துணிகளுக்கு

### சிறந்த வெண்மை தருகிறது

® டினோபால், ஸீபா-கெய்கீ லிமிடெட், ஸ்விட்ஸர்லாந்தின் பதிவுபெற்ற ட்ரேட் மார்க்.
[illegible] ரெஜிஸ்டர்டு ட்ரேட் மார்க்
சுஹ்ரித் கெய்கீ லிமிடெட், த.பெ. 11050, பம்பாய் 20 BR

முகம்: நீண்டு மோவாய். கன்னங்களில் அவ்வளவாகச் சதைப் பற்று இல்லை. பேசும்போது சொற்களை ஒருவிதமாகக் குழைத்துக் குழைத்து இழுத்துப் பேசுவான். கண்டக்காய் சற்று அளவுக்கு மீறியே பெரிதானது. அவனுடைய நடையும் பார்ப்பதற்கு வேடிக்கையாக இருக்கும்; இரண்டு கால்களிலும் 'ஆணி' விழுந்து 'விட்டிருந்த'தால் வேட்டைக்காரன் கையில் துப்பாக்கியோடு காட்டில் பதுங்கிப் பதுங்கி நடப்பதுபோல் நடப்பான். இப்படி நடப்பதால் அவனது தோள்பட்டைகள் எப்போதும் சற்று உயர்ந்தே காணப்படும். — எல்லாம் ஓராண்டுக்குமுன் கல்லூரியில் படித்த நாட்களில் நரசு கண்ட அதே கோலத்தில்தான் இப்போதும் இருந்தான் அந்தத் திருமலை.

"சொல்லு நரசு! நீ எப்ப வந்தே? எவ்வளவு நாட்களா இங்கே இருக்கிறே? மாயவரத்திலிருந்து மெட்ராசுக்கே வந்துட்டியா? நீ மட்டும்தான் வந்திருக்கிறயா? இல்லே, குடும்பத்தோட வந்துட்டீங்களா?" என்று அவசர ஆவலுடன் சரமாரியாகக் கேட்டுக்கொண்டே நரசுவின் தோளைப் பிடித்துக் குலுக்கினான் திருமலை.

"நேத்திக்குத்தான் வந்தேன்; நான் மட்டும்தான்" என்று சுருக்கமாகப் பதில் அளித்தான் நரசு. "அது சரி; நீ எப்படி இருக்கிறே? என்ன உத்தியோகம் பார்க்கிறே? இவ்வளவு நாட்களாய் ஒரு கடிதம்கூடப் போடாமல் இருந்துட்டியே? எனக்குத்தான் உன் வீட்டு விலாசம் தெரியாது; உனக்கு என்னோட விலாசம் தெரியுமில்லையா? எல்லாம் காலேஜோடு சரின்னு என்னை மறந்துட்டியா? அப்படித்தானே?" என்றான் சிரித்துக்கொண்டே.

"இங்கே பார், அப்பா! நான் பொய் சொல்லத் தயாராயில்லே. உன்னை அடியோடு மறந்துதான் போயிட்டேன். அது என் தப்பில்லே. சரி; அதை விடு. இப்போது சந்தித்திருக்கிறோம். இனி மேலாவது மறக்காமல் இருக்க முயற்சி செய்யறேன்; போதுமா?" என்று சொல்லி உரக்கச் சிரித்தான் திருமலை.

"பெரிய ஆள், அப்பா நீ!" என்று நரசுவும் சிரித்துக் கொண்டே அவன் முதுகில் ஒரு தட்டுத் தட்டிவிட்டு, "ஆமாம்; இப்போ என்ன பண்ணறே? எங்கே வேலை பார்க்கிறே?" என்று கேட்டான் ஆவலுடன்.

"வேலையா? வேலை தேடற வேலைதான் செய்துக்கிட்டிருக்கிறேன்."

"என்னது! வேலை தேடறயா?..... மெட்ராசில் இருந்துகிட்டா இன்னமும் வேலை இல்லாமல் இருக்கிறே?"

"மெட்ராசில் இருக்கிறதனாலேதான் இன்னமும் வேலை தேடிக்கிட்டிருக்கிறேன். கெட்டும் பட்டணம் சேருன்னு சொல்லுவாங்களே, அது படிச்சவனுக்கு! படிக்காதவனால் இங்கே பிழைச்சுட முடியும்; படிச்சவன் பாடுதான் திண்டாட்டம். அது கிடக்கட்டும்; உன் விஷயம் என்ன? எங்கே உத்தியோகம்? கல்யாணம் கில்யாணம் எல்லாம் ஆயிட்டதா?"

"எனக்கு எதற்கப்பா, இதற்குள்ளே உத்தியோகம், கல்யாணம்? அதையெல்லாம் மெல்லப் பார்த்துக்கலாம்னு இருக்கிறேன்!" என்று சொல்லிக் குறும்பாக நகைத்தான் நரசு.

அவன் சொன்னதை முற்றிலும் நம்பிவிட்டவன் போல் தலையாட்டிக்கொண்ட திருமலை, "ஆமாம்; இங்கு எங்கு வந்து தங்கியிருக்கிறே? ஹோட்டலிலா?" என்று கேட்டான்.

"இல்லே; என் அப்பாவோட நண்பர் ஒருவரின் வீட்டில்!" என்று சொன்ன நரசு, "அது சரி; நீ எதற்கு இப்ப இங்கே வந்தே?" என்று கேட்டான்.

"எழுந்திரு நரசு! நடந்துகிட்டே அதைச் சொல்றேன். ஏன்னா, அது





"சோஷலிஸத்தில் நம்பிக்கை உண்டா உமக்கு?"
"உண்டு! அதை வரவேற்கிறேன்!"
"அப்ப உங்களிடம் இரண்டு வீடுகள் இருந்தால் எனக்கு ஒன்று கொடுப்பீர்களா?"
"பேஷாக் கொடுப்பேன்!"
"இரண்டு குதிரைகள் இருந்தால் ஒன்று ?"
"தாராளமாகத் தருவேன்!"
"இரண்டு மாடுகள் இருந்தால் ஒன்று தருவீர்களா?"
"அட! போய்யா இப்ப என்னிடம் இரண்டு மாடுகள் தான் இருக்கு! அதை எப்படிக் கொடுக்க முடியும்?"

"என்ன, நம்ம நமசிவாயம் மானேஜர் அறைக்குச் சென்று வந்த பிறகு ஒரே கர்வமா நடை போடுகிறாரே! மானேஜர் ஏதேனும் பாராட்டினாரோ?"

"ஆமாம். 'உலகத்திலேயே இவரைவிடச் சிறந்த மண்டு யாருமே இருக்க முடியாது' என்று சொன்னாராம்!"



பற்றி நான் சொல்றது இங்கே இருக்கிற எவன் காதிலாவது விழுந்துட்டாப் போச்சு; எல்லாருமாகச் சேர்ந்து என்னைத் தூக்கிப் போட்டுப் பந்தாடிப் பிடுவாங்க!" என்று கூறிச் சிரித்த வாறு எழுந்தான் திருமலை.

இருவரும் சாலையை நோக்கி நடந்தனர்.

"நான் எதற்கு இங்கே வந்தேன்னு கேட்டே இல்லே? இப்ப சொல்றேன் கேளு: இந்தக் கம்பெனியில் அஸிஸ்டென்ட் அகவுன்டென்ட் போஸ்ட் — ஒன்னு காலி இருக்குதுன்னு பேப்பரிலே விளம்பரம் பார்த்து அதற்கு அப்ளிகேஷன் எழுதிப் போட்டேன். இன்றையத் தேதியிலே இண்டர்வியூவுக்கு வரும்படி கார்டு வந்தது. ரொம்ப ஜம்பமா புறப்பட்டு வந்தேன். இங்கே வந்து பார்த்தால் கம்பெனியே வேலை நிறுத்தத்தினலே கதவு அடைச்சுக் கிடக்குது."

இதைக் கேட்டு உள்ளூற ஒருவிதச் சங்கடப்பட்டுக் கொண்ட நரச அவ்வுணர்ச்சியை வெளிக் காட்டிக் கொள்ளாமல், "இந்த விவரத்தை அங்கே யிருந்து சொல்றதுக்கு ஏன் பயந்து எழுந்து வந்துவிட்டே?" என்று ஒரு போலியான தமாஷ்குரலில் வினவினான்.

"ஓ.... அதுவா? கொஞ்ச நேரத்துக்கு முன்னல் நான் ஓர் ஆசாமிகிட்டே பேசிக்கிட்டிருந்தேன் இல்லையா? அவர் வாயிலாக ஒரு விஷயம் வெளிப்பட்டது. அதாவது, இந்தக் கம்பெனியில் ஏற்கெனவே அஸிஸ்டென்ட் அகவுன்ட்டென்ட்டாக வேலை பார்த்தவரை ஏதோ காரணத்துக்காக டிஸ்மிஸ் பண்ணிவிட்டாங்களாம். அவரை மறுபடியும் வேலையில் அமர்த்தணும்னு யூனியன் கேட்டிருக்குது. அதைக் கம்பெனி நிர்வாகத்தினர் ஏற்றுக்கொள்ளாமல், அந்த வேலைக்கு வேறு ஆளை நியமிக்கப் பத்திரிகையில் விளம்பரம் செய்திருக்கிறாங்க. விஷயம் முற்றிப் போயிடவே, யூனியன் அந்த ஒரு கோரிக்கையோடு இன்னும் சில கோரிக்கைகளையும் புதுசாச் சேர்த்துக்கிட்டு வேலைநிறுத்தத்தை ஆரம்பிச்சுட்டது. இந்த நிலையிலேதான் நான் அந்த வேலைக்கு இண்டர்வ்யூவுக்காக வந்திருக்கிறேன். இது தெரிஞ்சா வேலை நிறுத்தம் பண்ணியிருக்கிறவங்க என்னைச் சும்மா விடுவாங்களா? அதான் யார்கிட்டேயும் எதுவும் கேட்காமல் மரியாதையாத் திரும்பி வந்துட்டேன். விடியாமூஞ்சி வேலைக்குப் போனு கதையாகிவிட்டது என் விஷயம்."

திருமலையால் சிரிப்பை அடக்க முடியவில்லை. அவன் கடகடவெனச் சிரித்தான். உண்மையில் அது சிரிப்பா?

(தொடரும்)

**அரைக் கிணறு**

**தாண்டினாலும்**

**முழுக் கிணறு தாண்டிய**

**பிரமை ஊட்டும்**

**படம் இது!**



நடக்கக் கூடாது நடந்து விட்டது என்று திருப்திப் படும் அளவுக்கு **அன்ஹோனி**யின் தொடக்கம் களைகட்டு கிறது. காரணம், பார்த்துப் பார்த்துப் புளித்துப் போன அம்சங்கள் குறைவாக இருப்பதே ஆகும். அன்ஹோனி என்றாலே நடக்கக் கூடாதது என்று தானே பொருள்!

மன நோய் நிபுணர் டாக்டர் ரேகாவின் ரயில் பயணத்தின் போது ஒரு பைத்தியக்காரன் எதிர்ப்படுகிறான்.

''சரியான பைத்தியம்!''

தம் நடிப்பால் ரசிகர் களைப் பைத்தியமாக்கி இப் பட்டத்தை — புகழுரையைப் பெறுபவர் சஞ்சீவ் குமார். காட்சிக்குக் காட்சி அவரது பைத்தியக்கார நடிப்பு பரிமளிக்கிறது. அதோடு அவரது சித்தத்தைத் தெளிய வைக்கும் முயற்சியில் டாக்டர் ரேகாவாக வரும் லீனா சந்தாவர்கரை ஈடுபடுத்திக் கடையில் அவரிடமே பித்துக் கொள்ளும் அளவுக்குக் கொண்டு போகும் கதைப் பாங்கு கனஜோர்!

பேஷ்! கதை உலகிலே ஒரு மாற்றம் என்று மகிழும் வேளையிலே ஒரு மாற்றம்! 'கதிநல் பைத்தியக்காரன் அல்ல; பெரும் துப்பறியும் நிபுணன்' — இந்த ஸஸ்பென்ஸை நடத்திச் செல்லும் முறை நன்றாயிருந்தாலும்...... ஒரு சந்தேகம்: 'உண்மைப் பைத்தியம், பொய்ப் பைத்தியம் — இதைக் கண்டு பிடிக்க மருத்துவ சாஸ்திரத்தில் வழி — வகை இல்லையா?'

வழி இருக்கிறது என்றால், அப்புறம் கதை வளருவது எப்படி? ரவி டண்டன் திரைப் படத்தை விறுவிறுப்பாக்கி இந்தக் கேள்வியை மறக்கச் செய்து விட்டார்!

இப்படி மாற்றம் காட்டி வளரும் கதை, காதலித்துத் துப்பறியும் (அல்லது துப்பறிந்து காதலிக்கும்) பழகிப் போன பழைய கவட்டில் செல்லத் தொடங்குகிறது.

இருந்தாலும் மன நோய் மருத்துவத்தில் வல்லுநரான ரேகாவையே, தன் தந்தையைக் கொன்றவள் தானே தானே என்று பிரமையுற வைத்துக் குற்ற உணர்வைப் புகுத்தும் கட்டம் திறமையாகப் படம் பிடிக்கப்பட்டிருக்கிறது.

பாக்ஸ் ஆபீஸ் கண்ணோட்டத்துடன் வழக்கமாகப் புகுத்தப்படும் நடனங்களுக்கும் குறைவில்லை.

## அன்ஹோனி



பைத்தியமாக வரும் அஸ்ரானியும் வைத்தியராக வரும் டேவிட்டும் மிதமான நகைச்சுவையை வழங்குகின்றனர். அடிதடிக் காட்சி விறுவிறுப்பூட்டுகிறது. 'ஜமன் தோ பாகல், பாகல் க்யா இஸ் பஹ்லாயேகா' பாடல் கருத்துக்கிசைவான இசையின்பம் கூட்டிச் செவியை நிறைக்கிறது.

அரைக் கிணறு தாண்டினாலும் முழுக் கிணறு தாண்டிய பிரமையை ஊட்டுகிறது அன்ஹோனி என்னும் இப்படம்.

— ரா. வீ.



# வண்ணங்களும் வகைகளும் பலப் பல
# ஆனால் தரம் ஒன்றேதான்: உயர்தரம்!

## அதுவே 'பாரிவேர்'

தரத்தை விரும்புவோர் பாரிவேரை நாடுவதற்கு இதுதான் காரணம்.
வழவழப்புடன் கூடிய பளபளப்பு கொண்டது. நீரை உறிஞ்சாதது. விரிசல் விழாதது.
முற்றிலும் சுகாதாரமானது. முத்துப் போன்ற வெண்ணிறம், மற்றும் பிங்க்,
பிரிம்ரோஸ், டர்க்காயிஸ், ஸ்கைப்ளூ, மெல்லோ கிரீன்,
மிஸ்ட் கிரே ஆகிய நிறங்களில் கிடைக்கிறது.

**Parryware**
**VITREOUS**

பொலிவான வாழ்க்கைக்கு
— பாரிவேர் விட்ரியஸ்

ஐ.எஸ்.ஐ. மற்றும் டி.ஜி.எஸ்.
அண்ட் டி. பட்டியல்களில்
இடம் பெற்றிருப்பது

ஈ.ஐ.டி. - பாரி லிமிடெட்
ராயல் டௌல்டன், யு.கே.வின்
தொழில்நுட்ப ஆலோசனை கொண்டது
டேர் ஹவுஸ், சென்னை-1

இந்தியாவின் மிகப் பெரிய
ஸெராமிக் தொழிற்சாலையில்
தயாரிக்கப்பட்டு, அகில
உலகப் புகழ் பெற்றது

டிஸைன்
இண்டெக்ஸுக்கான
யு.கே. கவுன்ஸில் ஆஃப்
இண்டஸ்ட்ரியல் டிஸைன்
நிறுவனத்தின் பட்டியலில்
இடம் பெற்றிருப்பது

# வீட்டு மாப்பிள்ளை

மிடுக்கும், தற்பெருமையும், பணச் செருக்கும் படைத்த தந்தையாக மேஜர் சுந்தரராஜன்; பாசமும், பரிவும், பழமையில் ஊறிய பண்பும் கொண்ட தாயாக சாவித்திரி; அன்பும், பண்பும் அடக்கமும் கொண்ட வீட்டு மாப்பிள்ளையாக ஏவி. எம். ராஜன்; ஊதாரித்தனமும், உருப்படுவதற்கு வழியே இல்லாத துர்க்குணங்களும் கொண்ட பணக்கார மாப்பிள்ளையாக எம். ஆர். ஆர் வாசு; சிரித்து மகிழும் மங்கைப் பெண்ணாகவும், பிறகு உருகி உண்மையை உணரும் உத்தம மனைவியாகவும் வரும் பிரமீளா; ஊதாரிக் கணவனைக் கைப் பிடித்து அவனுடைய விருப்பு வெறுப்புக்களுக்கெல்லாம் கைகொடுக்க முடியாமல் தவிக்கும் குமாரி பத்மினி — இவர்கள் தான் ஸ்ரீ சக்தி பிலிம்ஸின் ''வீட்டு மாப்பிள்ளை''யின் பாத்திரங்கள். இப்பாத்திரங்களின் குறிப்புக்களைக் கொண்டே திரைக்கதையைச் சுலபமாக ஊகித்துவிடலாம்.

மேஜர் சுந்தரராஜனுக்குப் பழகிப்போய் விட்ட பாத்திரந்தான். அவர் வெளுத்து வாங்குவதற்குக் கேட்பானேன்!

நடிகையர் திலகம் சாவித்திரி எந்தப் பாத்திரத்தையும் தம் சொந்தப் பாத்திரமாக ஏற்று நடிக்கும் திறமை மிக்கவர். அவருடைய திறமைக்கு இப்பாத்திரம் ஒரு சவாலாக அமையவில்லை; அநாயாசமாக ஊதித் தள்ளிவிட்டார்!

பிரமீளாவுக்குத் தம் நடிப்பைக் காட்ட அவர் ஏற்ற பாத்திரம் அரிய வாய்ப்பை அளித்திருக்கிறது. சந்தர்ப்பத்தின் நிர்ப்பந்தத்தினால் மனத்துக்குப் பிடிக்காதவனை மணந்து கொண்டு அவனைக் கரித்துக் கொட்டி விரட்டியடிக்கும்போதும், பிறகு நல்லறிவு பெற்றுக் கணவனே கண்கண்ட தெய்வம் என்று மதித்துப் பெற்றோர்களைப் பிரிந்து அவனைப் பின்பற்றிச் சென்ற போதும் அவர் நடிப்பு இதயத்தைத் தொடுகிறது. ஆரம்பத்தில் துடுக்காகப் பேசித் தூக்கி எறியும் அவர், பிறகு அடக்கமுள்ள குடும்பப் பெண்ணாக மாறி நடித்துப் பாராட்டைப் பெறுகிறார்.

தாயில்லாக் குழந்தைக்குத் தாயாயிருந்து பால் கொடுத்து வளர்த்து அதன் மூலம் பணம் பெற்றுக் குடும்பத்தைக் காக்கும் மனைவியைக் கணவன் தவறு செய்பவளாகச் சந்தேகித்துக் கொடுமைப்படுத்துகிறான். கடைசியில் உண்மை தெரிய வந்ததும் உருகிப் போய்விடுகிறான். இந்தக் காட்சியின் 'சஸ்பென்ஸ்'ம், ஏவி. எம். ராஜன், பிரமீளா இருவரின் நடிப்பும் பாராட்டுப் பெறுகின்றன.

ஏவி. எம். ராஜனுக்கு இந்தப் படத்தில் கிடைத்திருப்பது அரிய வாய்ப்பு. அந்த வாய்ப்பை நன்கு பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். ஆரம்பத்தில், ஒன்றும் தெரியாத அப்பாவியாக வந்து பூனையாயிருந்தவர், பிற்பகுதியில் புலியாக மாறிச் சீறியிருக்கிறார். மனைவியின் மனத்துக்குப் பிடிக்காத மணமகனாக வந்து மனைவியால் சாடப்பட்டு அவமானப்படுத்தப்படும் படுக்கையறைக் காட்சியில் நடுங்கி ஒடுங்கி நின்றவர், இடைவேளைக்குப் பிறகு நிமிர்ந்து நின்றதைத்தான் சொல்லுகிறேன்.

பேராசிரியர் ஏ.எஸ். பிரகாசம் கதை, வசனம் தீட்டியிருக்கிறார். வசனம் கருத்தோடு அமைந்து நம் கருத்தைக் கவர்கிறது. ஆனால் கதையில் ''பெத்த மனம் பித்து'' படத்தின் சாயல் முழுக்க முழுக்கத் தெரிகிறதே! இந்தப் படத்தில் நடிக்கும் முக்கியமானவர்கள் அந்தப் படத்திலும் நடித்திருப்பவர்களாயிற்றே! அந்தப் படமும் சமீபத்தில் வந்ததுதானே!

வசனத்தின் சிறப்புக்கு ஓர் உதாரணம்: ''மாமா, உங்கள் காலில் போட்டுக் கொண்டிருக்கும் செருப்பு, உங்களுக்காகத் தேய்ந்து கொண்டிருக்கிறது. ஆனால் உங்கள் கையிலே பிடித்துக்கொண்டிருக்கிறீர்களே அந்த 'பைப்' அது உங்களையே தேய்த்துக் கொண்டிருக்கிறது!'' இதே மாதிரிப் பலப் பல சுவையான வசனங்கள்!

குமாரி சச்சு கவர்ச்சிக் கன்னியாகத் தோன்றி, தேங்காய் சீனுவாசனுடன் சேர்ந்து கொண்டு நகைச்சுவை விருந்தளிக்கிறார்.

சிறந்த பின்னணிப் பாடகர் ஏ. எம். ராஜாவை மறந்துவிடாமல் இசையமைக்கச் செய்திருப்பது பாராட்டுக்குரியது. கவிஞர் வாலியின், ''ராசி! நல்ல ராசி!'' ''கண்ணா, போகும் கண்ணனும்....'' என்ற பாடல்கள் இனிமையாக ஒலிக்கின்றன.

ஏவி.எம்.ராஜனைப் படிக்காத அப்பாவியாக அறிமுகப்படுத்திவிட்டு, இடைவேளைக்குப் பிறகு மிகப் பெரியதொரு நிறுவனத்தில் முக்கியமான பதவி வகிப்பவராகக் காட்டப்படுகிறது; ஸ்கூல் ஃபைனல் வரையிலாவது படித்தவராகக் காட்டியிருக்கலாம்; ஒன்றுமே தெரியாதவன் ஒரு மிகப் பெரிய பொறுப்பை ஏற்று நிர்வகிப்பதாகக் காட்டியிருப்பது பொருத்தமாயில்லை.

'வீட்டு மாப்பிள்ளை'யைக் குடும்பப் பெண்கள் மகிழ்ச்சியோடு வரவேற்பார்கள்.

— காந்தன்



கையில் வாக்காளர் பட்டியலுடன் ஒவ்வொரு வீடாக ஒவ்வொரு போர்ஷனுக்குச் சென்று விவரம் கேட்டுக் கொண்டிருந்த ஒரு கட்சியின் தொண்டர்கள் விட்டலின் போர்ஷனுக்கும் வந்தார்கள்.

''ஸார்!'' என்று குரல் கேட்டு ஓய்வுக்காகச் சிறிது படுத்துக் கொண்டிருந்த விட்டல் எழுந்து வந்து அவர்கள் முன்னால் நின்றான். கையிலிருந்த பட்டியலைப் பார்த்தவாறு, ''விட்டல் என்பது நீங்கள்தானா?'' என்றார் ஒருவர்.

''ஆமாம்!''

''வித்யா?''

'' என் மனைவி!''

'' ஊரில் இருக்கிறார்களா?''

''ஊரில் இருக்கிறாள். ஆனால் இப்பொழுது வீட்டில் இல்லை. என்ன விஷயம்?''

''ஒன்றுமில்லை.... வாக்காளர் ஜாபிதா சரியா யிருக்கிறதாவென்று........''

''ஓ! இடைக்காலத் தேர்தலா?'' என்ற விட்டலிடம் இரண்டு துண்டுக் கடிதங்களைக் கொடுத்து, ''இந்த 'ஸ்லிப்'பை வைத்துக் கொள்ளுங்கள். தவறாமல் வந்து வாக்களிக்க வேண்டும்.......'' என்றார் ஒருவர். விட்டல் ஒன்றும் கூறாமல் அதை வாங்கிக்கொண்டான்.

'' ஸார்! தயவுசெய்து உங்கள் வாக்குகளை.....'' என்றார் வந்திருந்தவர்களில் மற்றொருவர்.

'' உங்களுக்கே!'' என்று முடித்தான் விட்டல். வந்தவர்கள் நன்றி தெரிவித்து விட்டுச் சென்றனர்.

தன் அறையில் வந்து உட்கார்ந்து அவர்கள் கொடுத்துச் சென்ற துண்டுக் கடிதங்களைப் பார்த்தான். வாக்காளரின் பெயர், தகப்பனார் அல்லது கணவரின் பெயர், வயது, விலாஸம் வாக்குச் சீட்டின் எண், வாக்குச் சாவடியின் எண் முதலியவை குறிக்கப்பட்டிருந்தன. தன்னுடைய சீட்டைப் பார்த்தான். எல்லாம் சரியாகவே குறிக்கப்பட்டிருந்தது. பிறகு மனைவி வித்யாவின் சீட்டைப் பார்த்தான். வயது ஒன்றைத் தவிர மற்றவையெல்லாம் சரியாகவே இருந்தன. வாக்காளர் பட்டியல்களில் குறிப்பிடப்பட்டிருக்கும் வயது பெரும்பாலும் தவறாகவே இருக்கும். இந்தத் தவற்றுக்குக் காரணம் பட்டியல் தயார் செய்பவர்களா அல்லது கணக்கெடுக்க வருகையில் விவரம் கொடுப்பவர்களா என்று கூற முடியாது. இது ஒரு பெரிய விஷயம் இல்லை என்றாலும் விட்டல் இதைப் பற்றியே மூளையைக் குழப்பிக் கொண்டிருந்தான். ஏனெனில், அவன் வயது மட்டும் சரியாகவே குறிக்கப்பட்டிருந்தது.

வித்யாவின் வயது மட்டும் தவறாக இருப்பானேன்?

ஒரு வேளை, வாக்குச்சீட்டில் குறிக்கப்பட்டுள்ள வித்யாவின் வயதுதான் சரியானதோ?

இதை எப்படித் தெரிந்து கொள்வது என்று சிறிது நேரம் யோசித்துக் கொண்டிருந்தான். பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றவே, எழுந்து சென்று ஒவ்வொரு பெட்டியாகக் குடைந்து பார்த்து அவனுடைய சர்டிபிகேட் புத்தகத்தைத்தேடினான். அதுகிடைக்கவில்லை!

அவனுக்கும் வித்யாவுக்கும் திருமணமாகி இரண்டு வருஷங்களுக்கு மேலாகிறது. இன்று வரையில் அவனுடைய சர்டிபிகேட் புத்தகத்தை அவன் பார்த்ததில்லை.

இருவரும் ஒரே நிறுவனத்தில் பணியாற்றுகின்றனர். ஒருவரையொருவர் விரும்பி, பேசிப் பழகித்தான் திருமணம் செய்து கொண்டனர். இன்று வரை அவர்களுக்குள் சிறு மனஸ்தாபமோ, அபிப்பிராய பேதமோ ஏற்பட்டது கிடையாது. அவர்கள் ஒற்றுமையாகத்தான் இருந்தார்கள்.

இப்பொழுது விட்டலின் உள்ளத்தில் ஒரு சிறு சந்தேகம் முளைத்தது. வித்யா தன்னிடம் பொய் சொல்லி விட்டாளா?

இது நாள் வரை அவனுடைய சர்டிபிகேட் புத்தகத்தைப் பார்க்க வேண்டும் என்று அவன் நினைத்ததே இல்லை. அப்படி ஒரு புத்தகம் அவளிடம் இருக்க வேண்டும் என்ற எண்ணம்கூட எழுந்தது கிடையாது. மாட்னி காட்சிக்குப் போயிருக்கும் வித்யா, வீடு திரும்பியதும் முதல் காரியமாக அவனுடைய சர்டிபிகேட் புத்தகத்தைக் கேட்டு அதைப் பார்க்க வேண்டும் என்று நினைத்தான்.

ஆறு மணிக்கு வீடு திரும்பிய வித்யா, மிகவும் கலகலப்பாகவும் இனிமையாகவும் பேசிக் கொண்டிருந்தாள். அந்தச் சூழ்நிலையை மாற்ற விரும்பாமல் புத்தகத்தைப் பற்றிப் பிரஸ்தாபிக்காமல் இருந்தான் விட்டல். சுமார் ஏழரை மணிக்குப் புடவையை



மடித்துப் பெட்டியில் வைக்கச் சென்ற வித்யா, ''பெட்டியை யார் திறந்தது? ஒரே களேபரமா யிருக்கே!'' என்றாள்.

'' நான்தான் திறந்தேன்!'' என்றான் விட்டல்.

'' உங்க வேலைதானா ?''

'' ஏன்? நான் உன் பெட்டியைத் திறக்கக் கூடாதா ?''

''நமக்குள் என்னுடையது, உங்களுடையது என்று வித்தியாசம் வேறு? இப்படிக் குப்பைக் கூளமாக்கியிருக்கிறீர்களேஎன்றுகேட்டேன்.''

''ஒரு பொருளைத் தேடினேன்....''

''என்ன தேடினீர்கள் ?''

விட்டல் பதில் கூறாமல் இருக்கவே மறுபடியும் கேட்டாள் வித்யா.

''உன்னுடைய எஸ்.எஸ்.எல். சி. சர்டிபிகேட்டை....'' என்று விட்டல் கூறியதும் வித்யாவின் முகம் சட்டென்று மாறியது. உணர்வேயில்லாமல், ''எதற்கு?'' என்றாள்.

'' உன் மார்க்குகளைப் பார்க்கத்தான் !''

கணவனின் முகத்தை ஆராய்வதைப் போல் ஒரு கணம் பார்த்தாள் வித்யா. பிறகு, ''அதற்கு இப்பொழுது அவசியம்?'' என்று கேட்டாள்.

'' என்னவோ பார்க்க வேண்டும் போல் இருந்தது. படிப்பில் நீ கெட்டிக்காரியா, நான் கெட்டிக்காரனா என்று தெரிந்து கொள்ள ஓர் ஆசை......'' என்ற விட்டலின் முகத்தில் தோன்றிய புன்னகை மிகவும் அர்த்தபுஷ்டியுடன் இருந்தது.

''இல்லை; வேறு எதையோ நீங்கள் தேடியிருக்கிறீர்கள்......''

''சர்டிபிகேட் புத்தகத்தைத்தான் தேடினேன்; எங்கே அது ?''

''இல்லை !''

''இல்லையென்றால் ?''

''எங்கோ தொலைந்து விட்டது!''

சில நிமிஷங்கள் ஏதோ யோசித்தவாறு இருந்தான் விட்டல். பிறகு, ''நிஜமாகவே தொலைந்துவிட்டதா?'' என்றான். அவன் கேள்வியில் சந்தேகத்தின் சாயல் தொனித்தது. 'ஆம்' என்பதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள் வித்யா. 'உன் வார்த்தையை நான் நம்பவில்லை' என்பதைப் போல் அவளைப் பார்த்தான். பிறகு ஒரு பெருமூச்சு விட்டவாறு எழுந்தான். அப்புறம் அன்று இரவு அவளுடன் சரியாகப் பேசவில்லை. இரண்டொரு முறை வித்யா ஏதேதோ பேச்சுக் கொடுத்துப் பார்த்தாள். 'உன் பேச்சு யாருக்கு வேணும்?' என்பதைப் போல் தன் கவனத்தை வேறு திசையில் திருப்பிக் கொண்டான் விட்டல்.



மறு நாள் வித்யாவும் கொஞ்சம் ஒதுங்கியே இருந்தாள். விட்டலின் உள்ளத்தில் என்ன புகைந்து கொண்டிருக்கிறது என்பதை அவளால் புரிந்து கொள்ள முடியவில்லை. மூன்றும் நாள் அலுவலகத்திலும் வித்யாவிடம் சற்று விட்டேற்றியாக இருந்தான் விட்டல்.

''என்ன வித்யா, உன் வீட்டுக்காரர் ஒரு மாதிரியாயிருக்கிறார் ?'' என்று சகஜமாக ஒருத்தி கேட்டுவிட்டாள். அவள் சகஜமாகத்தான் கேட்டாளோ, அல்லது விஷமமாகக் கேட்டாளோ, வித்யாவுக்கு அழுகை வந்துவிடும் போலிருந்தது.

அன்றிரவு கண்களில் நீர் ததும்ப, ''நான் என்ன தவறு செய்தேன்?'' என்றாள் விட்டலின் இரு கைகளையும் பிடித்துக்கொண்டு.

''நீ தவறு செய்தாய் என்று நான் சொல்லவில்லையே !''

''பின் என்னிடம் என்ன கோபம் ?''

''கோபமா ? நான் வாயைத் திறந்து கடுமையாக ஒரு வார்த்தையும் சொல்லவில்லையே !''

''கடுமையாகப் பேசினால்தான் கோபம் என்று அர்த்தமா? அதைவிடக் கஷ்டமாயிருக்கிறது இந்த வாயைத் திறக்காத அழிச்சாட்டியம்!''

''நீ மட்டும் என்னிடம் பொய் சொல்லலாமா?'' என்று கேட்டான் விட்டல்.

''என்ன பொய் சொன்னேன் ?''

''சர்டிபிகேட் தொலைந்துவிட்டது என்று.''

''சுவாமி சத்தியமா தொலைந்துதான போய்விட்டது !''

சில நிமிஷங்கள் விட்டல் எதுவுமே பேசவில்லை. வித்யா பொய் சொல்லக்கூடியவள் இல்லை. ஒருவேளை நிஜமாகவே தொலைந்து போயிருக்குமோ ? அப்படியானால் தன் சந்தேகத்தை எப்படித் தீர்த்துக் கொள்வது ? வித்யாவே மீண்டும் கேட்டாள்: ''என் சர்டிபிகேட்டுக்கு இப்பொழுது என்ன தேவை ? ஒரு வேளை, நான் பாஸா பெயிலா என்று சந்தேகமா ? நான் பாஸ்தான்! நானூற்றி அறுபது மார்க்குகள்!'' என்றாள். 'என்னைவிட நூறு அதிகம்' என்ற வார்த்தைகள் அவன் உதடு வரையில் வந்து நின்று விட்டன.

''எதற்காகக் கேட்டீர்கள்?'' என்று மீண்டும் கேட்டாள். மேஜையின் மீதிருந்த அலமாரியில் வைத்திருந்த தேர்தல் ஊழியர்கள் கொடுத்துச் சென்ற வித்யாவின் பெயர் எழுதிய துண்டுக் கடிதத்தை எடுத்துக் கொடுத்தான். தன் பெயர் கணவன் பெயர் எல்லாம் எழுதியிருந்தது. வயது என்ற இடத்தில் இருபத்தெட்டு என்று போட்டிருந்தது.

''இது என்ன சீட்டு ?'' என்றாள்.

''உன்னைப் பற்றிய விவரம் அடங்கிய சீட்டு. வாக்குச் சாவடியில் இதைக் கொண்டு காண்பித்தால் உன் வாக்குச்சீட்டைக் கொடுப்பார்கள். விவரமெல்லாம் சரியாயிருக்கிறதா என்று பார்....''

பதில் கூறாமல் அந்தச் சீட்டையே பார்த்துக் கொண்டிருந்தாள் வித்யா.

''உன் பெயர் சரியாயிருக்கிறதா ?''

''ம்........''

''தகப்பனார் அல்லது கணவன் பெயர்...''

''உங்கள் பெயர் இருக்கிறது.''

''வயது?''

''இருபத்தெட்டு போட்டிருக்கு!''

''இரண்டு வயது அதிகமாகப் போட்டிருக்கிறார்கள் போலிருக்கே?''

''......''

''இதைத் தெரிந்து கொள்வதற்குத்தான் சர்டிபிகேட் புத்தகத்தைத் தேடினேன்.''

என்ன பதில் கூறுவது என்று புரியாமல் சிறிது தயங்கினாள். பிறகு ''அதில் போட்டிருப்பது சரிதான்!'' என்றாள்.

''அப்படியானால்?''

''உங்களை விட நான் ஒரு வயது பெரியவள்!''

''ஒரு வயது இல்லை வித்யா ; மூன்று வயது?''

''என்ன உளறுகிறீர்கள்?''

''உளறவில்லை, உண்மையைத்தான் சொல்கிறேன். எனக்கு இப்பொழுது வயது இருபத்தைந்துதான் ஆகிறது. இரண்டு வருஷங்களுக்கு முன்பு, அதாவது, நம் கல்யாணத்துக்கு முன்பு ஆபீஸில் உன்னுடன் பழகத் தொடங்கிய காலத்தில் எனக்கு வயது இருபத்தி மூன்றுதான். உன்னிடம் எனக்கு நாளுக்கு நாள் ஒரு மயக்கம் ஏற்பட்டது. உன்னைப் பற்றி ஜாடையாக விசாரித்தேன். அப்பொழுது உனக்கு வயது இருபத்திநாலு என்று கேள்விப்பட்டேன். அதாவது என்னை விட ஒரு வருஷம் பெரியவள் என்று தெரிந்தது. இந்த ஒரு வருஷ வித்தியாசத்தால் நான் உன்னை இழக்க விரும்பவில்லை. அதனால் எங்கே நம் காதல் தடைபட்டு விடுமோ என்று பயந்து என்னுடைய வயதில் இரண்டு வருஷங்களைக் கூட்டி இருபத்தைந்தாக்கினேன்....ஆனால் அப்பொழுது நீ இரண்டு வயது குறைத்துச் சொல்லியிருப்பாய் என்று நான் நினைக்கவில்லை...''

''உங்களை ஏமாற்ற வேண்டும் என்று நான் என் வயதைக் குறைத்துச் சொல்லவில்லை. பெண்களுக்கே உரிய சுபாவத்தில் இரண்டு வருஷங்கள் கம்மியாகவே என் வயதைக் கூறிக் கொண்டிருந்தேன்.''

''என்னுடைய வயது இருபத்தைந்து என்று நான் கூறும்பொழுது உன்னுடைய உண்மையான வயது இருபத்தாறு என்று உனக்குத் தெரியுமில்லையா?''

''தெரியும். ஆனால் நீங்கள் என்னை எந்த அளவுக்குக் காதலித்தீர்களோ, அதற்குத் துளியும் குறைவில்லாமல் நானும் உங்களைக் காதலித்தேனே!... உங்களைவிட ஒரு வருடம் பெரியவள் என்பதைத் தெரிவித்தால் உங்களை அடையமுடியாமல் போய்விடுமோ என்று...''

''உண்மையை மறைத்து விட்டாயாக்கும்?''

''ஆசை வெட்கம் அறியாது என்பார்கள். ஆசைக்கு வயதும் ஒரு பொருட்டல்ல என்பது என் விஷயத்தில் சரியாயிற்று...''

''என்னை விட மூன்று வயது பெரியவளான உன்னை 'நீ', 'வா', 'போ' என்று ஏகவசனத்தில் பேசுகிறேன். உன் தம்பி போன்ற என்னை 'நீங்கள்' என்று மரியாதையுடன் அழைக்கிறாய்...''

''உங்கள் பதவி அப்படி!''

''நாம் இருவருமே கிளார்க்குகள்தானே?''

''அது ஆபீஸில்! வீட்டில் உங்கள் பதவி 'கணவர்' அல்லவா?''

''இவ்வளவு நாளும் சரி. இப்பொழுது நமது வயது வித்தியாசம் தெரிந்து விட்டதே?''

''இனிமேல் உங்களுக்கு அடங்கி நடப்பேனோ மாட்டேனோ என்று சந்தேகப்படுகிறீர்களா? என்வரை நான் உங்களை விடப் பெரியவள் என்பது ஏற்கனவே தெரிந்தது தானே? இவ்வளவு நாளும் நான் பணிவுடன் நடந்து கொள்ளவில்லையா? இப்பொழுது நீங்கள் இன்னும் இரண்டு வயது சிறியவர் என்பதால் மட்டும் மாறிவிடுவேனா? இனி மேல்தான் இன்னும் கொஞ்சம் அக்கறையுடன் உங்களைக் கவனித்துக் கொள்வேன்...'' என்று அன்புடன் கூறியவாறு செல்லமாக அவன் தலையை வருடினாள். விட்டல் ஒன்றும் சொல்லாமல் உட்கார்ந்திருந்தான்.

''என்னிடம் கோபமா?'' என்று வித்யா கொஞ்சினாள்.

''எதற்கு?''

''உண்மை வயதை ஆரம்பத்திலேயே சொல்லாததற்கு?''

''நான் உன்னைத்தான் காதலித்தேன் வித்யா; உன் வயதை அல்ல!''

சில நிமிஷங்கள் ஒருவரையொருவர் அன்பு கனியப் பார்த்துக் கொண்டனர்.

---

# செண்டை

கேரள நாட்டை நிலைக்களனாகக்கொண்டு உருவாகியுள்ள செண்டை என்னும் இந்த மலையாளத் திரையோவியம், மண் வளம், கலை வளம், இசை வளம் ஆகியவற்றுக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் சித்திரம்.

கதை சுருக்கமாக இதுதான் :

சிறுவன் அப்புவுக்குச் செண்டை வாத்தியத்தில் ஆர்வம். அது வளர்ந்து அவனை அற்புதமான தாள வாத்தியக்காரனாக உருவாக்குகிறது. மோகினி ஆட்டத்தில் வல்லமை பெற்ற சுமதி, அவன் தாள வாத்தியத்தில் மனத்தைப் பறிகொடுத்துத் தன் இதயத்தையே தானமிட வைக்கிறாள்.

பொறாமையும் பகைமையும் இருவரையும் இணையவொட்டாமல் பிரிக்கின்றன. காத்திருந்தவன் பெண்டாட்டியை இன்னொருவன் கவர்ந்து சென்ற கதையாக முடிகிறது!

போதாததற்குச் செண்டை வாத்தியப் போட்டியில் அவனைக் கலந்து கொள்ள விடாத வண்ணம் சூழ்ச்சிகள் நடைபெறுகின்றன. அப்படியும் அவன் வெற்றி காண்கிறான். சூதில் உடன்பட்ட கலைஞனே மனம் மாறி அவனுக்குப் பரிசை வழங்கும்பொழுது அவன் தன் கதையை முடித்துக் கொண்டு விடுகிறான். ஆம், மரித்துவிடுகிறான்.

இந்தக் கதைக்கு இயக்குனர் வின்சென்ட் புத்திபூர்வமான உத்தி கொடுத்து உயிர் கொடுத்துவிடுகிறார். பெரும்பாலும் காட்சி ஜோடனைகளைத் தவிர்த்து இயற்கைச் சூழலிலே உருவான இந்தப் படத்திலே, மண்ணைச் சார்ந்து வாழ்பவர்களின் நடை, உடை, பாவனையைக் காண முடிகிறது. செண்டைப் பயிற்சியில் தொடங்கித் துரித காலம் வரை காலப் பிரமாணத்தோடு கன கச்சிதமாகப் படம் இசை வளம் காட்டுகிறது. அதோடு கேரள மண்ணுக்குப் பெருமை சேர்க்கும் கதகளி, மோகினியாட்டம், தென்னாட்டுக்கே புகழ் சேர்க்கும் பரத நாட்டியம், செவியின்பம் பாய்ச்சும் சுத்தமான கர்நாடக இசை ஆகியவை கண்ணுக்கும் காதுக்கும் இன்பம் கூட்டுகின்றன.



செண்டை அப்புவாக வரும் மதுவுக்கு ஈடாக — இல்லை, மதுவையே ஈடுகொடுத்து நடிக்கும்படியாகச் செய்யும் பெருமை சுமதியாக வரும் ஸ்ரீ வித்யாவைச் சாரும்; அப்படி அநுபவித்துப் பல இடங்களில் நடிக்கிறார்.

நகைச்சுவை நடிகர் பகதூர் டான்ஸ் மாஸ்டராக வந்து 'பாவர்ச்சி' பைந்தாலை நினைவுபடுத்தினாலும் தம் பணியில் சிறந்து நிற்கிறார். ஆதூர் பாஸி ஆக்கிரத்தில் மேஜை மீது தாளம் போடும் காட்சி உள்ளத்துப் புயலை உணர்த்துவதில் ஒரு புது முனைப்பைக் காட்டுகிறது. நந்திதா போஸ், கவியூர் பொன்னம்மா, நிக்குரிசி, எஸ். பி. பிள்ளை ஆகியவர்களும் தங்கள் நடிப்பால் படத்தின் சிறப்புக்கு உதவுகின்றனர். செண்டை படமெடுத்தவர்களுக்குத் தரமாம் பூச்செண்டு.

— அக்ஷயம்

# மேன்மை தரும் மேம்பாலம்

ஹைவேஸ் பிரதம என்ஜினீயர் திரு வி. வி. பத்மநாபன் கூறுகிறார்:

''இந்த மாதிரி 'பாதைக்கு மேல் பாதை' (Flyover) முன்னேற்றமடைந்த நாடுகளில் சர்வசகஜம். இந்தியாவில் மினிமேம்பாலங்கள் பம்பாயில் மரைன் டிரைவிலும், கேம்ப்ஸ் கார்னரிலும் இருக்கின்றன. ஜெமினிக்கருகில் சென்னை நகருக்கு மேன்மை தரும் அண்ணா மேம்பாலம் 1599 அடி நீளமுடையது. இதில் நான்கு பாதைகள் மொத்தம் நாற்பத்தெட்டு அடி அகலத்தில் உள்ளன!''

''அண்ணா மேம்பாலம் எத்தனை மாதங்களில் உருவாயிற்று?''

''கட்டி முடிக்க இருபத்தொரு மாதங்கள் ஆயின. இந்த நீண்ட காலத்தில் போக்குவரத்துத் தடைப்படாமல் மக்களுக்கு எந்த வித இடைஞ்சலுமின்றி நாங்கள் இந்த மாபெரும் மேம்பாலம் கட்டி முடித்திருக்கிறோமே, அதை எண்ணி முக்கியமாய்ப் பெருமைப்படுகிறோம்.''

''இந்த ஜெமினிப் பிரிவில் எத்தனை வாகனங்கள் செல்லுகின்றன?''

''ஒரு மணிக்கு 9000 வாகனங்கள் செல்லுகின்றன! ஆயிரம் விளக்குப் பகுதியிலிருந்தும் தேனாம்பேட்டையிலிருந்தும் வரும் வாகனங்கள் நேரடியாக மேம்பாலத்தில் எந்த வித நிறுத்தமுமின்றி இனி ஓடிக் கொண்டேயிருக்கும். மாம்பலம் பகுதியிலிருந்தும் அதிகப் போக்குவரத்து மவுண்ட்ரோட்டுக்கு உள்ளது. அந்த மாம்பலம் பகுதி வாகனங்களுக்காகக் கோபதிநாராயணசாமி செட்டி ரோட்டில் ஒரு மேம்பாலம் இந்தப் பிரதான மேம்பாலத்தில் இணைக்கப்பட்டிருக்கிறது.''

''மேம்பாலம் அமைக்க யோசனை கூறியது யார்? அதை நிறைவேற்றி வைத்தவர்கள் யாரோ?''

''மேம்பாலம் அமைக்க 1960ம் ஆண்டு ஹைவேஸ், ரூரல் ஒர்க்ஸ் இலாகா தீர்மானித்தது. அதைக் கட்டி முடித்தவர்கள் ஈஸ்ட் கோஸ்ட் கன்ஸ்ட்ரக்ஷன் அண்ட் இண்டஸ்ட்ரீஸ் கம்பெனியார். அறுபத்தாறு லட்சம் ரூபாய் செலவில் தயாரான அண்ணா மேம்பாலத்துக்குச் செலவான சிமெண்ட் 3765 மெட்ரிக் டன்; எஃகு 901 மெட்ரிக் டன்கள்.

''இதில் இன்னொரு விசேஷம். அண்ணா மேம்பாலத்தைப் பிற்பாடு விஸ்தரிக்க எண்ணினால் இரு பக்கங்களிலும் தொடக்கத்திலுள்ள சிறிய தூண்களை அகற்றிவிட்டு, முட்டுக் கொடுத்து மேம்பாலங்களைத் தூக்கி, பெரிய தூண்களைப் பொருத்தி விஸ்தரித்து விடலாம். அண்ணா மேம்பாலத்துக்கு ஹாலந்து பிலிப்ஸ் நிபுணர்கள் யோசனைப்படி High mast Lighting System அமைக்கவிருக்கிறோம். இந்த விளக்கு வாகனங்களை ஓட்டுபவர்களுக்குக் கண்களை உறுத்தாத முறையில் அண்ணா மேம்பாலப் பகுதியை வெளிச்சத்தில் ஆழ்த்தும்!''

''மேம்பாலம் அடியில் 'திடீர்க் குடிசைகள்' ஏற்பட்டு விடுமோ? அதைத் தடுக்க என்ன செய்ய உத்தேசித்திருக்கிறீர்கள்?''

''ஓ! அதற்கு 144! 144 தூண்கள் உள்ள மேம்பாலத்துக்குக் குந்தகம் ஏற்படாத வகையில் சிறு ஓர் உணவு விடுதியும், சூபர் மார்க்கெட் கடைகளும் அமைய விருக்கின்றன. கவலை வேண்டாம்!''

ஜூலை மாதம் ஒன்றாந் தேதி — ஜெமினிப் பகுதி. அண்ணா மேம்பாலம் வண்ண விளக்குகளால் ஜொலிக்கிறது. தமிழக முதல்வர் திரு மு. கருணாநிதி ஒரு 'பட்டனை' அழுத்தி நாககரம் முழங்க அண்ணா மேம்பாலத்தைத் திறந்து வைக்கிறார்.

அண்ணா மேம்பாலம் உருவான கையோடு அண்ணாவின் கனவுப்படி தமிழக மக்களின் வாழ்வு மேம்படட்டும். — **குண்டுமணி**







# கிரிக்கெட் மாட்சுக்கு மட்டும்!

கி. ராஜேந்திரன்

சுற்று வட்டாரத்தில் வசிப்பவர்களின் நடவடிக்கைகளைக் கவனிப்பது என்ற கெட்ட பழக்கம் ஆனந்தனுக்கு ஏற்பட்டிருந்தது. மாடியில் தனது தனி அறையில் இருந்தபடி நாலாபுறமும் பல வீட்டு மனிதர்களையும் தன்னிடம் இருந்த பைனாகுலர்ஸின் உதவியுடன் ஆராய்ந்து வந்தான். கிரிக்கெட் மாட்சுக்கென்று வாங்கிய சக்தி வாய்ந்த பெரிய பைனாகுலர்ஸ்! பகலில் திரைச் சீலைகளின் பின்னால் மறைந்து கொண்டு பார்ப்பான். இரவில் மொட்டை மாடி இருளில் நின்று நோட்டம் விடுவான்.

ஆனந்தனுக்கு வயது இருபத்தொன்று. பட்டம் வாங்கியாகி விட்டது. வேலை கிடைத்தது. ஆனால் தனது தகுதிக்கு ஏற்றதாக அவனுக்குப் படவில்லையாதலால் மறுதளித்து விட்டான். அதனால் சிரமம் ஒன்றுமில்லை. அப்பா பெரிய உத்தியோகத்தில் இருந்தார். ஆனந்தன் ஒரே பிள்ளை. சொந்த வீடு. மாடியில் ஒரே ஒரு அறைதான். அதை ஆனந்தனுக்கு என்று ஒதுக்கிக் கொடுத்திருந்தார், அப்பா மாசிலாமணி. அவரது கௌரவத்துக்கு ஏற்பப் பிள்ளைக்கும் ஓரளவு பெரிய உத்தியோகமாகவே கிடைக்கும் என்று எதிர்பார்த்துக் காத்திருந்தான் ஆனந்தன்.

ஆனால் பொழுது போகாததுதான் சிரமமாக இருந்தது. எத்தனை சினிமாதான் பார்ப்பது? நண்பர்களுடன் எவ்வளவுதான் அரட்டை அடிப்பது? இதனால்தானோ என்னவோ ஆனந்தனுக்கு மேற்படி கெட்ட பழக்கம் ஏற்பட்டிருந்தது. இரவு நீண்ட நேரம் கண் விழித்திருப்பான். பகலில் இரண்டு மணி நேரம் படுத்துக் குறட்டை விடுவான்.

ஒரு நாள் பிற்பகலில் பக்கத்து வீட்டு வேலைக்காரியுடன் அவன் தாயார் மாடி ஏறிவந்தாள். ஆனந்தன் பைனாகுலர்ஸை மேஜை டிராயரில் போட்டு மூடிவிட்டு ஒரு நாவலை எடுத்து வைத்துக் கொண்டு உட்கார்ந்தான்.

அம்மாவும் அந்த வேலைக்காரியும் அவன் அறைக்குள் வந்தார்கள். அங்கிருந்தபடியே பக்கத்து வீட்டைப் பார்த்தார்கள். பிறகு வெளியே மொட்டை மாடியில் நின்று ஏதோ கசமுச வென்று பேசிக்கொண்டார்கள்.

ஆனந்தனுக்குத் திக் திக் கென்று நெஞ்சு அடித்துக்கொண்டது. பக்கத்து வீட்டில் யாராவது தன் பேரில் குற்றம் சுமத்தியிருப்பார்களோ....?

வேலைக்காரி படி இறங்கிச் செல்லும் சத்தம் கேட்டது. ஆனந்தனின் அம்மா அவன் அறைக்குள் வந்தாள். ''ஏண்டா, டீ சாப்பிடுறியா, இல்லே, காப்பி போட்டுமா?'' என்று கேட்டாள்.

ஆனந்தன் நிம்மதி அடைந்தவனாய், ''நீ எதை வேணுமானாலும் கொடு'' என்றான். பின்னர்,

''எங்கே வந்தான், அந்த ஆயா?'' என்று சுவாரசியமில்லாதவன் போல் நடித்துக் கேட்டான்.

''அதை ஏன் கேட்கிறே!'' என்று ரகசியக் குரலில் ஆரம்பித்தாள் தாயார். ''பக்கத்து வீட்டிலே சினிமாவிலே டான்சு ஆடற அந்தப் பொண்ணு இருக்கில்லே, அவ, மாடியிலே தான் காற்றோட்டமா படுத்துக்கிறு ளாம்... எங்கே படுத்துக்கிட்டால் இந்த வீட்டிலே யிருந்து பார்த்தா தெரி யும், எங்கே படுத்துக்கிட்டால் தெரியாதுன்னு கவனிச்சுக்கிட்டு வர இவளை அனுப்பினுளாம்! என்னு இவ பெரிய பதிவிரதை பாரு!''

''ஆமாம், வேலை மெனக்கெட்டு நாம் இவளைத்தானே பார்த்துக் கிட்டு உட்கார்ந்திருக்கோம்'' என்றுன் ஆனந்தன் கோபமாக.

''டெக்கு, விட்டுத் தள்ளு! சமூகத்திலே நாலும்தான் இருக்கும். நாமதான் அனு



சரிச்சுக்கிட்டுப் போவ ணும்'' என்று சமாதான மாகச் சொல்லிவிட்டுப் போனுன் 'சௌந்தரம்.

நாலுவிதமாய் என்ன. நாற்பது விதமாகக்கூட இருக்கும் என ஆனந்தன் சீக்கிரமே உணர்ந்தான். எந்த இடத்தில் படுத் தால் பக்கத்து வீட்டிலி ருந்துபார்ப்பவர்கள் கண்

ணில் படும் என்ற முடிவுக்கு அவன் தாயாரும் அந்த வேலைக்காரியும் வந்தார்களோ அதே அறையில்தான் அந்த எக்ஸ்டிராவின் நடமாட்டம் அதிகமாக இருந்தது! அங்கேதான் படுத்தான், படித்தான், அலங்கரித்துக் கொண்டான்!

அவன் வேலைக்காரியை அனுப்பிப் பார்த்து வரச் சொன்னதன் உண்மையான நோக்கம் என்ன என்பது ஆனந்தனுக்குப் புரிந்துவிட்டது. விஷமமாகப் புன்னகை செய்து கொண்டான். இப்படி யெல்லாம் மனோ விகாரங்கள் சிலரிடம் உண்டு என்று அவன் படித்திருந்தான். இப்போது நேரிலேயே கண்டும் விட்டான்! உள்ளத்தில் ஒரு கிளுகிளுப்பு! தன்னிடம் இருந்த மனோ விகாரம் பற்றி அப்போது சிந்திக்கவில்லை!

அவன் முன்னிலும் அதிகமானருசியுடன், அக்கம் பக்கத்து மனிதர்களை பைனாகுலரின் துணையுடன் ஆராய்வதைத் தொடர்ந்தான். எதிர் வரிசையில் மூன்றாவது வீட்டில் ஒரு மாதத்துக்கு முன்னால்தான் மாடி போர்ஷனுக்கு ஒரு தாயாரும் பெண்ணும் குடி வந்திருந்தார்கள். தாய், வீட்டுக் காரியங்களைக் கவனிக்க, பெண் மைதிலி அடக்கமாய், அலங்கரித்தும் கொண்டு காரியாலயம் சென்று வந்தாள். மாடர்னாக இருக்கத் தெரியாத இவளிடம் அதிக சிரத்தை கொள்ளவில்லை ஆனந்தன். ஆனால் அவன் சற்றும் எதிர்பாராத விதமாக ஒரு நாள் இரவு பதினொரு மணிக்கு அவள் இவன் கவனத்தைக் கவர்ந்தாள். தூக்கம் பிடிக்காமல் இவன் மொட்டை மாடி இருளில் பைனாகுலரும் கையுமாக நின்றபோது மைதிலி விநோதமாக நடந்து கொள்வதைப் பார்த்தான்.

அவள் தாயார் உறங்கிவிட்டாள் போலும். இவள் மட்டும் பிரமாதமாக அல்ட்ரா மாடர்னாகத் தன்னை அலங்கரித்துக் கொண்டிருந்தாள். யாரையோ 'வாருங்கள், வாருங்கள்!' என்பது போல முகமலர்ந்து கைகூப்பி வரவேற்றாள். ஆனால் விருந்தினர் யாருமே வரவில்லை! 'உட்காருங்கள்!' என்று நாற்காலியைச் சுட்டி ஜாடை காட்டினாள். சாப்பாட்டு மேஜையில் தட்டு, உணவு வகைகளுடன் பாத்திரங்கள் எல்லாம் கொண்டு வந்து வைத்தாள். அருகில் அமர்ந்து உபசாரம் பண்ணினாள். 'அவன்' ஏதோ கூறப் போகக் கலகலவென்று சிரித்தாள். பிறகு வெட்கப்பட்டுத் தலை குனிந்தாள். 'அவனை'ப் பார்த்துக் 'கூடாது, கூடாது!' என்பது போல் ஒரு விரலை உயர்த்தி அசைத்தாள். அப்புறம் 'அவன்' கரங்களை எடுத்துத் தன் அதரங்களில் ஒற்றிக்கொண்டாள், கன்னத்தில் பதித்துக் கொண்டாள். எல்லாம் நடிப்புத்தான் — அதாவது தன் அருகே ஒரு காதலன் இருப்பது போன்ற பாவனையில் நடந்து கொண்டதுதான்!

ஆனந்தனுக்கு ஆச்சரியத்துடன் பரிதாபமும் பொங்கியது. 'பாவம்! எப்படி ஏங்குகிறாள் இந்தக் கன்னி? சீக்கிரம் ஒரு கல்யாணம் நடக்கக் கூடாதா இவளுக்கு? பேச்சு வாக்கில் அவர்களுக்குச் சமதையான நிலையில் உள்ள தன் நண்பர்கள் சிலரைப் பற்றி அம்மாவின் காதில் போட்டு வைத்தால் என்ன? அந்தப் பெண்ணின் தாயாரை அம்மா சந்திக்க நேரும் போது மைதிலியின் எதிர்காலம் பற்றிப் பேசாமலா இருப்பாள்?'

ஏதோ பேச்சு வாக்கில் நினைவு வந்தவன் சொல்வதுபோல் திருமணமாகாமல் இருக்கும் தன் நண்பர்களைப் பற்றிக் கூறி மைதிலியின் பெயரையும் இழுத்து விட்டான் ஆனந்தன். அம்மா அளித்த பதில் அவனை உலுக்கி எடுத்து விட்டது!

''சிவ சிவா! அவள் விதவையாகி மூணு வருஷமாயிடுச்சாம்! கல்யாணமாகி ஆறாவது மாசம் புருஷனைப் பறி கொடுத்துவிட்டாள். அவளுக்காவது கல்யாணமாவது! நாவல்லே தான் பிரமாதமா எழுதுவாங்க விதவா விவாகம் அது இதுன்னெல்லாம்!''

ஆனந்தன் அப்படியே கூனிக் குறுகிப் போனான். ஏன், அவனுக்கே கிடையாதே அந்தத் துணிவு?

துயரச் சாயல் மிகுந்த இந்த அதிர்ச்சிக்குப் பிறகாவது ஆனந்தன் பைனாகுலரைப் பயன்படுத்துவதை அடியோடு நிறுத்திவிட்டிருக்கலாம். ஆனால் பழக்கத்துக்கு அடிமையாகிவிட்ட அவனால் அதை விட்டொழிக்க முடியவில்லை.

அன்று அவன் பஸ் ஸ்டாண்டில் நின்று கொண்டிருந்தபோது எதிர் வீட்டு மல்லையா வந்தார். ''என்ன தம்பி எங்கே கிளம்பறப்பலே, சினிமாவுக்கா?'' என்றார்.

''இல்லே, டிரைவிங் ஸ்கூல்லே கார் ஓட்டக் கத்துக்கிறேன். இன்னும் இரண்டு நாட்களிலே லைசென்ஸ் கிடைச்சுடும்'' என்று பெருமையோடு கூறிக் கொண்டான் ஆனந்தன்.

''அது சரி, ஆனா மூக்குக் கண்ணாடியை மறந்து வீட்டில் வைச்சுட்டே போறியே; எப்படிக் கார் ஓட்டுவே?'' என்றார் மல்லையா.

''மூக்குக் கண்ணாடியா? எனக்கு எதுக்கு மூக்குக் கண்ணாடி?'' என்றான் ஆனந்தன்.

''அப்படின்னா வாரது எந்த பஸ்? படிச்சுச் சொல்லு, பார்ப்போம்'' என்று கேட்டார் மல்லையா.

''முப்பத்தெட்டு.''

''ரைட்! அதுக்காகத்தான் நான் காத்திருக்கேன்; வரட்டுமா?'' என்று கேட்டவாறே பஸ்ஸைப் பிடிக்க நகர்ந்தார் அவர்.

ஆனந்தன், சரியான அசடு என்று அவரை எடை போட்டுச் சிரித்துக் கொண்டான். ஆனால் அவர் அசடு இல்லை. அழுத்தமான பேர்வழி என்று அன்று மாலையே புரிந்து போயிற்று அவனுக்கு. ஆனந்தனின் தகப்பனார் இன்னும் ஆபீஸிலிருந்து திரும்பவில்லை. இவன் கிரிக்கெட் ஆடி விட்டுக் கேட்டைத் திறந்து கொண்டு உள்ளே நுழைந்தபோது எதிர் வீட்டு மல்லையாவும் பின்னோடு வந்தார்.

''வா தம்பி, மாடியில் உன் அறைக்குப் போவோம். நாளை குதிரைப் பந்தயத்துக்கு உன் பைனாகுலர்ஸ் கொஞ்சம் கடன் வாங்கிக்கலாம்னு பார்க்கிறேன்.''

திடுக்கிட்ட ஆனந்தன் அவரைக் கலவரக் கண்களால் பார்த்தான்.

''என்ன தம்பி? எனக்கு எப்படித் தெரியும்னு யோசிக்கிறயா? உன் கண்களுக்குக் கீழே வளைவா அடையாளம் இருக்கே, கண



போத்தனூர் கல்கி ஏஜண்ட் திரு கே. பொன்னுசாமி நாயுடு அவர்கள் குமாரன் சிரஞ்சீவி பொ. நாராயணசாமிக்கும், சௌ. பத்மாவதிக்கும், சமீபத்தில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. வாழ்க மணமக்கள்.



தகப்பனார் : நேற்றுக் காரை எடுத்துக்கொண்டு எங்கே போனாய் ?

மகன் : என் சிநேகிதன் ஒருவனுடன் சினிமா வுக்குப் போனேன்.

தகப்பனார் : காரிலே ஒரு 'லிப்ஸ்டிக்கை' வைச்சுட்டுப் போய்விட்டான். இந்தா அவனிடம் திருப்பிக் கொடுத்துவிடு !

---

மான பிரேம் உள்ள கண்ணாடி போடறவங் களுக்குத்தான் அழுந்தி அழுந்தி அப்படி அடையாளம் விழும். நீதான் கண்ணாடி போடறது இல்லேன்னு சொல்லிட்டியே. ஆக பைனாகுலர்ஸை அடிக்கடி பயன்படுத்த றேன்னு ஊகிச்சேன்.'' அவன் கையை இறு கப் பிடித்துக் கொண்டு நிதானமாகப் பேசிய வாறே மெல்லப் படிகளில் ஏறினார் மல்லையா.

ஆனந்தன் பிரமை பிடித்தாற் போலிருந் தான். மறுக்கவோ எதிர்க்கவோ துணிவில்லை அவனுக்கு. ரொம்பச் சுவாதீனமாக அவன் அறைக்குள் நுழைந்த மல்லையா, அலமாரி யைத் திறந்தார்; மேஜை டிராயரை இழுத் தார்; ஷெல்ஃபை ஆராய்ந்தார். பைனா குலர்ஸை எடுத்துக் கண்களில் பொருத்தி நாலாபுறமும் சுற்றிப் பார்த்தார்.

''பலே! எல்லோருடைய வீட்டையும் வசதியாக ஆராயலாம் போலிருக்கே! எதிர் வீட்டில் இருக்கும் என்னைக்கூடக் கண் காணிச்சுக்கிட்டு இருப்பே இல்லையா?'' என்று கூறிச் சிரித்தார். பைனாகுலர்ஸை அவ னிடமே தந்துவிட்டு அறையை மேலும் குடைந்தார். இன்னொரு மேஜை டிராயரை இழுத்துப் பார்த்தார். ஜன்னலில் அடுக்கி யிருந்த நாவல்களை ஒரு விரலால் தள்ளித் தலைப்புக்களை நோட்டம் விட்டார். ஒரு பக்க மாகப் பெஞ்சின் மீது விரிக்கப்பட்டிருந்த டன்லப் பில்லோ மெத்தையைத் தூக்கினார். அதன் அடியில் ஆனந்தன் பிளாக் மார்க்கெட் டில் பதினைந்து, இருபது என்று கொடுத்து வாங்கிய, பிளே பாய், ஜெண்டில்மேன் போன்ற நாலைந்து ஆபாசப் பத்திரிகைகள் இருந்தன. மல்லையா சிரித்துக்கொண்டே அவற்றை இருந்த இடத்திலேயே வைத்து விட்டுத் திரும்பினார். ''சீக்கிரமா நல்ல உத்தி யோகம் தேடிக்க தம்பி! அப்பத்தான் கல் யாணம் ஆகும்'' என்று உபதேசித்துவிட்டுப் படிகளில் இறங்கி வீடு திரும்பினார். பைனா குலர்ஸை அவர் பெற்றுப் போகவே யில்லை. அவர் அதற்காக வரவேயில்லை, தன் அறையை ஆராய்ந்து பார்ப்பதற்காகவே வந்திருக்கிறார் என்பது ஆனந்தனுக்குத் தெளிவாய்ப் புரிந் தது. ஆத்திரம் ஆத்திரமாக வந்தது அவ னுக்கு. பல்லைக் கடித்துக் கொண்டான். ஆனால் தன் ரகசியங்களைத் தெரிந்துகொண்ட அவரை எதிர்க்கவோ, பகைக்கவோ தனக்குத் துணிவில்லை என்பதையும் உணர்ந்தான்.

**ம**ல்லையா அப்போது வீட்டில் தனியாகத் தான் வசித்து வந்தார். பள்ளி, கோடை விடுமுறைக்கு மூடியதும் அவர் மனைவியும் குழந்தைகளும் கிராமத்துக்குப் போயிருந் தார்கள். வியாபாரத்தை விட்டு விட்டு வர முடியாதெனக் கூறி அவர் ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருந்தார்.

அன்றிரவு நடு நிசியை நெருங்கிக் கொண் டிருந்த வேளை. மல்லையா வீட்டு வாசலில் ஒரு கார் வந்து நின்றது. எந்தவேலை இரவில் நீண்ட நேரம் கண் விழித்துப் பழக்கப்பட்ட வன் ஆனந்தன். இன்று மல்லையா வந்து ஓர் உலுக்கு உலுக்கி விட்டுப் போயிருக்கிறது. கொஞ்ச நஞ்சமிருந்த தூக்கத்தையும் விரட்டி அடித்து விட்டிருந்தது. அவன் கார் சத்தம் கேட்டதும் எழுந்து உட்கார்ந்து இருளில் ஜன்னல் திரைக்குப் பின்னாலிருந்தபடி பைனாகுலர்ஸின் உதவியுடன் எதிர் வீட்டில் நடப்பவைகளை உன்னிப்பாய்க் கவனிக்க ஆரம்பித்தான்.

காரிலிருந்து இறங்கியவரை விளக்குகள் போட்டு மாடிக்கு மல்லையா அழைத்துச் சென்றார். அங்கே ஒரு சோபாவில் அமரச் செய்தார். ஃபிரிஜ்ஜிலிருந்து ஐஸ் கட்டி களும், விஸ்கி, சோடாவும் எடுத்து வந்து ஊற்றிக் கொடுத்தார். அந்த நபர் அதைத் தொடவே இல்லை. ரொம்பக் கோபமாகப் பேசினார்; ஆனால் சத்தமில்லை. மல்லையாவும் பதிலுக்கு ஆத்திரத்துடன் பேசினார். ஆனால் குரலை உயர்த்தவில்லை. தங்கள் சண்டையும் ரகசியங்களும் ஊர் அறியப் பரவ வேண்டாம் என்பது போல் அவர்கள் அடங்கிய குரலில் காரசாரமாகப் பேசிக் கொண்டார்கள். திடீ ரென்று 'ஸவுண்ட் டிராக்' மட்டும் நின்று போன சினிமாப் பார்ப்பது போலிருந்தது ஆனந்தனுக்கு. சிரிப்பு வந்தது. அது அடங்கு வதற்கு முன் ஒரு பயங்கர நிகழ்ச்சியையும் அவன் பைனாகுலர்ஸ் மூலம் பார்த்துவிட் டான். ஸோபாவின் மூலைகளில் சாய்ந்து கொள்வதற்கென்று வைக்கப்பட்டிருக்கும் திண்டுகளில் ஒன்றை மல்லையா எடுத்து அந்த நபரின் முகத்தின் மீது வைத்து அழுத்திக் கொண்டிருந்தார்.

'அடப் பாவி! அவன் மூச்சு முட்டிச் செத்து விடுவான்டா!' என்று நினைத்துக் கொண் டான் ஆனந்தன். மல்லையாவின் நோக்கமும் அதுதான் என்பது அடுத்த கணமே அவ னுக்குப் புரிந்து விட்டது. ஒரு பயங்கரக் கொலையைக் கண்ணுக்கு மெய்யாகப் பார்த்

துக்கொண்டிருக்கிறோம் என்பது தெளிவாயிற்று. அவன் கூச்சலிட விரும்பினான். முடியவில்லை! அதற்கு இரண்டு காரணங்கள். ஒன்று பயம். இரண்டாவது தன் ரகசியங்களை மல்லையா மட்டுமின்றிச் சுற்று வட்டாரத்தில் எல்லாருமே அறிய வாய்ப்புத் தந்ததாகும் என்ற தயக்கம்.

சில விநாடிகளில் மல்லையா ஆனந்தனின் அறை இருந்த பக்கம் திரும்பினார். அந்த முரட்டு மனிதரின் கண்கள் வெறி மிகுந்து பார்க்கப் பயங்கரமாக இருந்தன. 'ஆ! அவர் ஏதோ ஜாடை காட்டுகிறாரே! அடப் பாவி! என்னை அங்கே வரச் சொல்லி யல்லவா சமிக்ஞை செய்கிறார்! நான் இங்கிருந்தபடி பைனாகுலரின் உதவியுடன் அவரைக் கவனித்துக் கொண்டிருப்பேன் என்பதில் அவ்வளவு தீர்மானம் அவருக்கு! நான் அந்தக் கொலையைப் பார்ப்பேன், பார்க்க வேண்டும் என்று திட்டமிட்டேதான் நடந்து கொண்டாரா? நான் கவனியாதது போல் இருந்துவிட்டாலென்ன?' ஆனந்தனின் நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. மல்லையா மீண்டும் ஆத்திரத்துடன் வேகமாய்க் கையையாட்டி அவனை வருமாறு ஜாடை செய்தார். அப்புறம் ஒரு 'ப்ளேபாய்' பத்திரிகையை உயர்த்திக் காட்டி ஆட்டினார்.

'ப்ளாக் மெயில்!' — ஆனந்தனுக்குப் பளிச்சென்று புரிந்துவிட்டது. 'நான் போய்த்தான் ஆகவேண்டும். மல்லையா சொன்னபடி கேட்டுத்தான் ஆகவேண்டும். இல்லாவிட்டால்?.. சுற்று வட்டாரம் சிரிக்கும்! தாய் தந்தையர் அவமானம் அடைய நேரிடும்! வெளியே தலை காட்டவே தனக்கு வெட்கமாயிருக்கும்! 'நான் தூங்கிக் கொண்டிருந்தேன். நடந்ததைக் கவனிக்கவேயில்லை' என்று சொல்லி மன்றாடினால்கூட மல்லையா விட மாட்டார். அவர் கோபம் அதிகரிக்கவே செய்யும். உதவிக்கு வராத தன்னைப் பழி வாங்கத் தயங்கவே மாட்டார்!' இவ்வளவையும் ஒருசில விநாடிகளில் யோசித்து முடிவு கட்டிய ஆனந்தன், ஓசைப்படுத்தாமல் கீழிறங்கிச் சென்று வாசல் கதவைத் திறந்து கொண்டு வெளியேறினான். எதிர் வீட்டு மாடியை அடைந்தான்.

அவனைப் பார்த்ததும் மல்லையா நிம்மதிப் பெருமூச்சு விட்டார். ''எங்கே தூங்கிவிட்டிருப்பாயோ, எனக்கு உதவ வராமலிருந்து விடுவாயோ என்று பயந்து கொண்டேயிருந்தேன்; நல்ல வேளை!'' என்றார்.

ஆனந்தன், ''நான்....வந்து...'' என்று ஏதோ குளறினான்.

மல்லையா பதற்றமின்றிச் சொன்னார் : ''என் பிஸினஸ் பார்ட்னர் இவன். இத்தனை நாள் என் பொறுப்பிலேயே விட்டுவிட்டுப் பெங்களூரில் இருந்தான், வேறு வியாபாரத்தைக் கவனிச்சுக்கிட்டு. நான் இரண்டு வருஷமா நஷ்டக் கணக்குக் காட்டவே, இப்ப திடீர்னு இந்த பிஸினஸ் சரியா நடக்குதான்னு பார்க்கணும்னு சொல்லிக்கிட்டு வந்துட்டான். ஆபீஸிலிருந்து கணக்குப் புத்தகங்கள், லெட்ஜர்கள், வவுச்சர் ஃபைல்கள், பாலன்ஸ்ஷீட்டுகள் எல்லாத்தையும் எடுத்துக்கிட்டுத் தான் தங்கியிருந்த ஓட்டல் அறைக்குப் போனான். அவற்றை ஆராய்ந்திருக்கிறான். கணக்கு வழக்குகளில் நான் பண்ணியிருக்கிற சில மோசடிகள், தில்லு முல்லுகளைக் கண்டு பிடிச்சுட்டான்; கெட்டிக்காரப் பயல்! அகால வேளை, ராத்திரி நேரம்னுகூடப் பார்க்காமே சண்டை பிடிக்க நேரே வீட்டுக்கே வந்துட்டான்! அவன் தட்டிக் கேட்க நினைத்தால் நான்

---

## ஆட்டம் பாம் - ஆட்டோ ஹான்

அணுவைப் பிளக்கலாம் என முதன் முதலில் கண்டுபிடித்தவர் நோபல் பரிசு பெற்ற ஜெர்மானியர் ஆட்டோ ஹான். ஆனால் இவர் அணுவைப் பிளப்பதால் ராணுவ ரீதியில் ஏற்படக்கூடிய அனுகூலங்களைப் பற்றி ஆராய மறுத்தார். இரண்டாம் உலக யுத்தத்தின் போது ஹிட்லரின் விஞ்ஞானிகள் அணு ஆயுதங்களைத் தயாரித்து விடாமலிருக்கத் தம்மால் இயன்றதையெல்லாம் செய்தார். 'ஹிட்லரிடம் அணுகுண்டு கிடைத்துவிடுமானால் நான் தற்கொலை செய்து கொண்டுவிடுவேன்' என்று கூறினார் ஆட்டோ ஹான், தம் நண்பர்களிடம். ஆனால் ஹிட்லருடைய மூளை புதிய கண்டுபிடிப்புகளை ஏற்க மறுத்தது. தபால் இலாகா மந்திரி அணு ஆயுதங்கள் பற்றிப் பேசியபோது ஹிட்லர் ஆணவத்துடன் அவரைக் கேலி செய்தார்: ''யுத்தத்தில் எப்படி வெற்றி பெறுவது என்று மண்டையை உடைத்துக் கொண்டிருக்கும் இந்த சமயத்தில் போயும் போயும் தபால் இலாகா மந்திரிதானா யோசனை சொல்ல முன்வர வேண்டும்!''

ஹானுடைய கண்டுபிடிப்பினையொட்டி மேலும் பல ஆராய்ச்சிகள் புரிந்துதான் அமெரிக்கா முதல் அணு குண்டைத் தயாரித்தது. 'ஜப்பானிய நகர் ஹிரோஷிமாவில் முதல் அணு குண்டு விழுந்தது' என்று அறிந்ததும் ஹான் அடைந்த துயரம் கொஞ்ச நஞ்சமல்ல. அப்போது பிரிட்டனில் காவலில் வைக்கப்பட்டிருந்த இந்த ஜெர்மானிய விஞ்ஞானி தற்கொலைக்கு முயலலாம் என்று காவலர்கள் எதிர்பார்த்துக் கண்ணும் கருத்துமாகக் கவனித்துக் கொண்டார்கள்.

- ஜெர்மன் இண்டர்நேஷனல்



அதுக்குக் கட்டுப்பட முடியுமா? தீர்த்துக் கட்டிட்டேன்!

''இப்ப நீ என்ன செய்யணும் தெரியுமா? நீதான் கார் ஓட்டக் கத்துக்கிட்டியே. இந்த உடலே இழுத்துக்கிட்டுப் போ! வாசலிலே பெங்களூரிலிருந்து இவனே ஓட்டிக்கிட்டு வந்த கார் நிக்குது. அதில் பிணத்தைப் பின் ஸீட்டில் ஏற்று. ஓட்டிக்கிட்டுப் போ. இரும்புப் பாலத்தண்டை நிறுத்து. உடலைக் கூவத்திலே தள்ளு. காரை அங்கேயே விட்டு விட்டு நடந்து திரும்பிவா! அவ்வளவு தூரம் திரும்பி நடந்து வர என்னால் முடியாது. அதனால்தான் இன்னொருவனை உன் உதவி வைக்கோருகிறேன். இவன் இங்கே வந்தான் என்கிற விவரமே யாருக்கும் தெரியப்படாது! காரில் உன் விரல் ரேகை அடையாளம் விழக் கூடாது. உன் கைக்குட்டையைப் பயன் படுத்து!''

கனமாவது கனம்! தோள்களைப் பற்றி இழுத்துப் போனான் ஆனந்தன். மாடிப் படி களில் 'தட்தட்' டென்று பிரேதத்தின் கால்கள் விழும் சத்தம் கேளா திருப்பதற்காக மல்லையா குதிகால்களுக்கு மேல் பிடித்துத் தூக்கி உதவினார். ஆனால் வாசலை அடைந்த தும் மல்லையா கதவைச் சாத்திக் கொண்டு விளக்குகளை அணைத்து விட்டு மேலேறிச் சென்றுவிட்டார்.

இருட்டில் தனியே இயங்கினான் ஆனந் தன். மூச்சு வாங்கியது. உடல் நடுங்கியது. பீதி கவ்வியது. எப்படியோ உடலைக் காருக் குள் ஏற்றி, அதன் பாக்கெட்டைத் துழாவி, கார் சாவியைக் கண்டெடுத்து, காரைக் கிளப்பி... சொப்பனமாக, பயங்கரச் சொப் பனமாக இருந்து விட்டால் எவ்வளவு நன்றா யிருக்கும்!

ஆனால் அப்படி நடக்கவில்லை. கார் மவுண்ட் ரோட்டில் சென்று கொண்டிருந் தது. சினிமா விடுகிற நேரம். இன்னும் சற் றுப் போனால் நடமாட்டம் மிகுந்துவிடும்.

பின்னால் முனகல் சத்தம் கேட்டது!

டயர் கிரீச் கிரீச்சென்று ஒலிக்க, பிரேக் போட்டான் ஆனந்தன். ஆனந்தம் என்பதன் முழுப் பொருளையும் அன்றுதான் அவன் உணர்ந்தான். கீழே இறங்கிப் பின் கதவைத் திறந்து பார்த்தான். இலேசான அசைவு! மல்லையா சற்று அவசரப்பட்டு விட்டார்! இது விஷயத்தில் அவரும் முன் அனுபவம் இல்லாதவர்தானே! மூச்சு முட்டி மயங் கியவனை இறந்தவனாகவே தீர்மானித்து, வேலையை முழுக்க முடிக்காமல் பாதியில் நிறுத்தி விட்டிருக்கிறார்! உயிர் போகவில்லை! ஒட்டிக் கொண்டிருக்கிறது!

ஓட்டமாக ஓடினான் ஆனந்தன், அருகி லிருந்த ஒரு பெட்டிக்கடைக்கு. மணிபர்ஸை எடுத்து வரவில்லை என்று நினைவு வந்ததும் மோதிரத்தைக் கழற்றிக் கொடுத்து ஒரு சோடா வாங்கிக் கொண்டு திரும்பினான். அவர் மேல் தெளித்தான். எழுந்து உட் கார்ந்தவரை நெஞ்சோடு அணைத்துக் கொண்டு ஆசுவாசப்படுத்தி வாயில் சோடா ஊற்றி சிகிச்சை செய்தான். ''பகவானே! ஏழுமலை ஆண்டவா!'' என்று உதவிக்கு அழைத்தான், நன்றியும் செலுத்தினான்.

ஆம், 'இவர் மயக்கம் தெளிய இன்னும் சற்றுத் தாமதமாகியிருந்தால் இறந்துவிட்ட தாகவே கருதிக் கூவத்தில் தள்ளியிருப்போமல் லவா' என்று நினைத்த போதே அவனுக்கு உடல் சில்லிட்டு நெஞ்சு உறைந்தது.

நாகார்ஜுனன் அதிர்ஷ்டக்காரர். எம லோகத்தை மிதித்துவிட்டுத் திரும்பி வந்து நிமிர்ந்து உட்கார்ந்திருந்தார். சுற்றுமுற்றும் பார்த்து, ''என்ன? எங்கே...?'' என்று கேட்டு விழித்தார்.

ஆனந்தன் சிரிப்பும் அழுகையுமாக நடந்த தைக் கூறி, ''டாக்டரிடம் போகலாம்'' என்றான்.

''அதெல்லாம் வேண்டாம், நேரே போலீஸ் ஸ்டேஷனுக்கு விடு காரை'' என்றார் நாகார்ஜுனன்.

---



## என் கடன்!

எண்ணும் எழுத்தும் கண்களெனத் - தினம்
எடுத்தே இயம்பி நின்றிடுவார்
ஒன்றும் உலகில் சேர்ப்பதற்கும் - இடம்
உண்மையில் இல்லையே என்றிடுவார்!

ஏவலர் முதல்வர் அலுவலரை - நாம்
ஏற்ற வழிகளில் சரிப்படுத்தும்
ஆவலில் கிடைத்த அனுபவங்கள் - பல
ஆயிர மாயிரம் கதைஉரைக்கும்!

இன்றொரு மங்கைக் கல்லூரியில் - சேர்க்க
இடையினில் உள்ள தரகர்களின்
பின்னொரு மாதமாய் அலைந்துவிட்டேன் - பல
பிரமுகர் தம்மிடம் குழைந்துவிட்டேன்!

நன்கொடை கேட்டதைக் கொடுத்துவிட்டேன்-பாங்கில்
நாளெல்லாம் சேர்த்ததை எடுத்துவிட்டேன்
என்கடன் குழந்தைகள் படிப்பெனவே - தினம்
எண்ணினேன்! ''கடனி''லே மூழ்கிவிட்டேன்!

- நெல்லை ஆ. கணபதி

ஆனந்தனை மீண்டும் பீதி கவ்வியது. "ஸார்! நான் சொல்வதைச் சற்றுக் கேளுங்கள்" என்று வெட்கத்தை விட்டுத் தன்னை மல்லையா பிளாக்மெயில் செய்வது போல் நடந்து கொள்ளக் காரணம் இருப்பதை விவரித்தான் "ஸார்! என்னை இந்த விவகாரத்தில் இழுக்காதீங்க, ப்ளீஸ்! எங்கள் குடும்பத்தின் மானம் கப்பலேறும்!" என்று கெஞ்சினான்.

"கவலைப்படாதே, தம்பி! ஒரு பக்கம் தெய்வாதீனம் என்றாலும் நான் உயிர் பிழைக்க நீயும் கொஞ்சம் உதவியா யிருந்திருக்கே. அதனால் உனக்குத் தீங்கு செய்ய மாட்டேன். அந்தப் பயல் என்னைக் கொலை செய்ய முயன்றான் என்பதையே அடியோடு மறந்து விடுகிறேன். அவன் வியாபாரத்தில் பண்ணியிருக்கிற தகிடுதத்தங்களே போதும். அவற்றை நிரூபித்தே நாலைந்து வருஷங்களுக்கு அவனைக் கம்பி எண்ண வைத்துவிடலாம். அப்புறம் வெளியே வந்தாலும் இவன் பொருஷ் தெரிஞ்ச எவன் இவனோட வியாபாரம் பண்ணுவான்? பிஸினஸ் ஸர்க்கிள்லே எனக்கு இருக்கிற செல்வாக்கைப் பயன்படுத்தித் தெருத் தெருவா இவனை நாயா அலைய வைக்க முடியும் என்றார். பிறகு தன்னாலே வந்து என் காலைப் பிடிச்சுக்கிட்டுக் கதறுவான். அந்த நிலை நிச்சயம் அவனுக்கு ஏற்படப் போகுது!"

நன்றியறிதலுடன் நாகார்ஜுனன் தங்கியிருந்த ஹோட்டலுக்குக் காரோட்டிச் சென்றான் ஆனந்தன். அவனை வீட்டில் விட்டுவிட்டு வருவதாக அவர் கூறியதை மறுதளித்தான். "நடந்தே போயிடறேன் ஸார்! நான் சீக்கிரமா திரும்பினா மல்லையாவுக்குச் சந்தேகம் தட்டும். கம்பி நீட்டப் பார்ப்பான். நீங்க நாளைக் காலையில் அவனைச் சட்டப்படி கவனிச்சுக்கிடுங்க" என்று கூறிவிட்டு, நடந்தான் வீடு நோக்கி. நடையில் வேகமும் தெம்பும் துணிவும் குதூகலமும் இருந்தன, நன்னடத்தை பற்றிய சிந்தனை காரணமாக.

மறுநாள் காலை பிரசித்திபெற்ற வக்கீலுடனும் உதவிக்கு இரண்டு ஆட்களுடனும் நாகார்ஜுனன் மல்லையாவைக் காண வந்த சமயம், ஆனந்தன் மாசிலாமணியிடம், "அப்பா! எனக்கு ஒரு வேலை பார்த்துக் கொடுங்க. பொழுது போக மாட்டேங்குது. சாதாரண வேலையாய் இருந்தாலும் பாதகமில்லை. உடலால் உழைக்கிற மாதிரி வேலையானால் ரொம்ப உத்தமம். இரவில் நல்ல தூக்கம் வரும். மனம் கெட்டலையாது. உடலும் உள்ளமும் தூய்மையாய் இருக்கும். உத்தியோக உயர்வு படிப்படியாகக் கிடைக்கிறபோது கிடைக்கட்டும்!" என்றான்.

"சௌந்தரம்! நான் ஆபீசுக்குக் கிளம்பறேன். ஞாபகமா, உன் பிள்ளைக்குத் திருஷ்டி கழிக்கப் போடு" என்று கூறிவிட்டுப் புறப்பட்டார் மாசிலாமணி.

மாடியில் பிளேபாய் முதலியன தீக்கிரையாயின. அடுத்து, பைனாகுலர்ஸை அதற்குரிய தோல் பெட்டியில் வைத்து மூடினான் ஆனந்தன். அதன் மேல் ஒரு தாளை ஒட்டினான். அதில் "கிரிக்கெட் மாட்சுக்கு மட்டும்" என்று எழுதியிருந்தது!

**பு**லி தப்பி ஓடியதற்கு மூலகாரணம் தளபதி நைனப்ப சேர்வைதான் என்று பலரும் ஒருமுகமாகப் பேசிக் கொண்டனர். அரும் பாடுபட்டுக் காட்டிலிருந்து உயிருடன் பிடித்து வந்த புலியைக் கவனக் குறைவான காவலின் காரணமாகத் தப்பியோடச் செய்து விட்டனர். போகிற புலி சும்மாப் போகாமல் ஒருசில மனித ரத்தத்தையும் சுவை பார்த்து விட்டு ஓடிவிட்டது! அதை விட்டு வைக்கலாமா?

சிவகங்கைக் கோமான் பெரிய மருது பாண்டியர் சிந்தனையே வடிவாக அமர்ந்திருந்தார். கவனமின்மையால் தப்பி ஓடிய புலியைத் தானே வீழ்த்தித் தீரவேண்டும் என்பது தளபதி நைனப்ப சேர்வையின் பிடிவாதமாகும். ஒரு முடிவான சிந்தனையுடன் அரண்மனைக்குப் புறப்பட்டார்.

அரண்மனைக் கூடத்தில் தளபதியைக் கண்டதும், "என்ன தளபதி ஏதேனும் முக்கிய விஷயமா?" என்று வினவினார் பெரிய மருது பாண்டியர்.



# விழலுக்கு இறைத்த வீரம்

கோவி. மணிசேகரன்

"புலிக்கு ஒரு முடிவு தேவை" என்றார் நைனப்ப சேர்வை.

மருது பாண்டியர் கலகலவெனச் சிரித்தார்.

"அந்த முடிவை என்னிடம் விட்டுவிடு, தளபதி!"

"மன்னிக்க வேண்டும், பூபதி! அந்த முடிவை எனக்கே விட்டுவிட வேண்டுகிறேன்."

"ஏன்?"

"மக்கள் என்னை ஒரு மாதிரியாகப் பேசுகிறார்கள். ஒரு புலியை உயிருடன் பிடிப்பது என்பது எவ்வளவு துன்பம். தளபதி கோட்டை விட்டுவிட்டாரே! மீண்டும் அதை அவரால் பிடிக்க முடியுமா என்று பேசுகிறார்கள்."

"மக்கள் பேசிக் கொள்கிறார்களே என்பதற்காகவா...?"

"இல்லை, அரசே! நான் செய்த தவற்றுக்கு நானே பரிகாரம் செய்து விடுவதுதானே முறை?"

"அது சரியல்ல, தளபதி!"

"...ஏன் மன்னா!" என்று தயக்கத்துடனேயே கேட்டார் தளபதி.

மருது பாண்டியர் சொன்னார்: "ஒரு நல்ல தளபதியை இழந்து விடுவேனோ என்ற அச்சம் தான் காரணம்."

தளபதி நைனப்ப சேர்வை குறுக்கிட்டார்: "என் வீரத்தின்மீது அரசருக்கே நம்பிக்கை இல்லை என்பதைத்தான் இது காட்டுகிறது."

"அப்படியில்லை, தளபதி! நானே மீண்டும் சென்று பிடித்து வரலாமென்றுதான்."

"நான் மேலும் லாயக்கில்லாதவனாகி விடுவேன். கவனக் குறைவாக இருந்துவிட்டவன் நான். நானே கவனத்துடன் சென்று மீட்டு வருவேன்."

"உங்களுக்குப் புலிப் போர்ப் பயிற்சியில் அவ்வளவு திறமை போதாது என்பது என் அபிப்பிராயம்."

"அரசே! அப்படி நினைத்து என்னைத் தாழ்த்தி விடாதீர்கள். எனக்குள்ள புலிப் போர்ப் பயிற்சியை நீங்கள் காண வேண்டும் என்பதுதான் என் ஆசை."

"அப்படியா? நல்லது! காளீஸ்வரர் விட்ட வழி. தளபதி! நாளையே காளையார்கோயில்

காட்டை நோக்கிச் செல்கிறோம். அங்கு தானே புலி மறைந்திருக்கிறது?''

''ஆமாம், அரசே!''

''நல்லது; வேட்டைக்கான ஆயத்தங்களைக் கவனிக்கவும்.''

**ம**றுநாள் விடிந்தது.

எல்லோருமே வேட்டைக்குப் புறப்பட்டார்கள். அதிக தூரம்கூடக் கிடையாது. ஏறத்தாழ ஏழு கல் தொலைவு! எனவே அரச குடும்பமே புறப்பட்டது. இதுவரை வேட்டைப் பயணத்துக்கு அனைவரும் சென்றது கிடையாது. இந்தப் புலிப் பிடிப்பை நேரடியாகக் காண எல்லோரும் அவாக் கொண்டனர். ஆனால் சின்ன மருது மட்டும் அரண்மனையிலேயே தங்கி விட்டார். அவருக்கு அண்ணனின் இந்தக் காட்டு வாசம் என்பது துளிக்கூடப் பிடிக்காத ஒன்று. இந்த நைனப்ப சேர்வை ஏதோ தமக்குள்ள புலிப் போர்ப் பயிற்சியைக் காட்டத் துடிக்கிறார். இன்றுள்ள நிலைமைக்கு இது அர்த்தமற்றது: முட்டாள்தனமான பிடிவாதம்! புலியாக மாறி ஆங்கிலக் கும்பினிக்காரன் மீது பாய்வதற்கில்லாமல், இது என்ன வேட்டைப் பயணம்?

ஐந்து நாழிகைப் போதுக்கெல்லாம் அருகிலிருந்த காளையார் கோயில் காட்டை அடைந்து விட்டனர். பயங்கரமான அந்த அடர்ந்த காட்டை அரச குடும்பத்தினர் இது வரையில் பார்த்ததே கிடையாது. அழகான விடியற்காலைப் போதே அத்துணை ஐயுறத் தக்கதாக இருந்தது. எங்கும் அடர்த்தியான மரங்கள்!

காலை பலகாரம் சாப்பிடுவதை அங்கு வைத்துக்கொள்ளலாம் என்று பட்டத்தரசி ராக்காத்தாள் ஆசைப்பட்டதால் அவ்வாறே செய்தனர். பச்சைப் பசேல் என்ற அடர்ந்த சூழ்நிலையில் — காலைச் சூழ்நிலையில் புல் தரையில் ரத்தினக் கம்பளங்களை விரித்துக்கொண்டமர்ந்து உண்ணும்போது, ஏதோ ஓர் இனம் தெரியாத — மாறுபட்ட இன்பம் இருப்பது போல் தெரிந்தது. அனைவரும் உண்டு முடித்தாகிவிட்டது. அவரவர் அதற்குள் அடிக்கப்பட்ட கூடாரங்களுள் தக்க பாதுகாவலுடன் இருக்கத் தொடங்கினர். வீரப் பணியாட்களும், காட்டு வேட்டைக்சென்று அனுபூத்து வந்த மலைவாசிகளும் புலியை வளைத்துப் பிடிப்பதற்கு முயன்றனர்.

ஒருதடவை ஏமாந்து கூண்டில் அடைபட்ட புலியாயிற்றே அது! அத்துணை எளிதில் ஏமாறுமா, என்ன?

அன்றைக்கு முழுவதுமே தேடி அலைந்து முயன்றதுதான் மிச்சமாகப் போய்விட்டது. இனி மறுநாள்தான் முயல வேண்டும்.

நன்றாக இருட்டி விட்டது. தீப்பந்தங்கள் கொளுத்தப்பட்டன. பட்டப் பகலிலேயே



# மினிஏஜ்

- இந்தத் தலைப்பில் சிறுகதை களை வரவேற்கிறோம். ஆகஸ்டு முதல் வாரம் தொடங்கிப் பன்னிரண்டு மின்ஏஜ் கதைகள் கல்கியில் பிரசுர மாகும்.

- வழக்கமான சன்மானம் தவிர இவற்றில் சிறந்ததென நாங்கள் கருதும் சிறுகதைக்கு விசேஷப் பரிசும் அறிமுக எழுத்தாளருக்கு மற்றொரு சிறப்புப் பரிசும் உண்டு.

- மின்ஏஜ் கதைகள் இன்றைய இளம் தலைமுறையினரின் பிரச்னைகளையும் சுக துக்கங் களையும் அலசும் யதார்த்தக் கதைகளாகவோ, மர்மக் கதைகளாகவோ, நகைச் சுவைக் கதைகளாகவோ, லட்சியக் கதைகளாகவோ அல்லது வேறுவிதமாகவோ அமைந்திருக்கலாம்.

- அறிமுக எழுத்தாளராயின் மறவாமல் அதைக் குறிப்பிட வும். பிரசுரத்துக்கு ஏற்கப் படாத கதைகளைத் திரும்பப் பெறப் போதிய தபால் தலைகளை வைத்து அனுப்ப வேண்டும்.

**ஆசிரியர், கல்கி,**
**சென்னை - 600031**

பயங்கரத்தை உண்டுபண்ணும் அந்த வனாந் தரத்தில் இரவில் தங்கிக் கழிப்பது மருட்சிக் குரியதாக இருந்தது. பட்டத்தரசி ராக்காத் தாளும் பயந்து போனாள். ஆனால் இளைய ராணி மீனாட்சி மட்டும் பயந்தாளில்லை. அவளுக்கு இது பெரிதாகத் தெரியவில்லை. கவுண்டன் கோட்டையில் எத்தனையோ பயங் கரங்களைச் சந்தித்தவள். வெள்ளைப் புலிக ளிடம் போராடியதைக் கவனித்தவள்! ராக் காத்தாள் அப்படி யல்லவே! அவள் அரச வேந்தல் இளவரசி! அரண்மனைவாசி! பயப் படத்தானே செய்வாள்?

இரவு அங்கேயே சமைத்த மாமிச உணவை உண்டு முடித்தனர். ஆனால் எப்படித் தூங்கு வது என்பதுதான் அரண்மனைக் குடும்பப் பெண்களுக்கு வேதனையாக இருந்தது. மீனாட்சியைத் தவிர! நள்ளிரவு நேரம் வரை யில் அவர்கள் ஒருவரோடொருவர் பேசிக் கழித்து விட்டனர்.

மருது பாண்டியருக்கு ஒரு சந்தேகம் இருந் தது. புலி அந்தக் காட்டில்தான் இருக்கிறதா? அல்லது அது தப்பியோடி வேறு எங்கேனும் புகுந்து கொண்டு விட்டதா?

நள்ளிரவுப் போதில் அவ்வப்போது உறுமல் கேட்கச் செய்தது. இப்போது மருது பாண்டியருக்கு நிச்சயமாகி விட்டது. புலி வேறு எங்கும் போய்விடவில்லை. அது அந்தக் காட்டில்தான் இருக்கிறது.

பாதி விழித்தும் பாதி உறங்கியுமாக அந்த இரவு கரைந்து பொழுதும் விடிந்துவிட்டது. எழுந்து கொள்கிறபோதே வேட்டை அன் றுடன் முடிவு பெறுமா என்கிற ஏக்கம் மிருந் தது. இன்றும் முடியவில்லையானால் மாலைக் குள் அரண்மனைக்குச் சென்றுவிட வேண்டும் என்றே தீர்மானித்துக் கொண்டார். எல் லோரையும் விடச் சாந்துப் புலவர்க்கு இந்த எண்ணம் உறுதியாக இருந்தது. சொல்லப் போனால் எல்லோரையும் விட அவர்தான் அதிகமாகப் பயந்து போனார்.

ஆனால் எப்படியும் புலியைப் பிடித்து வஞ்சம் தீர்ப்பதென்று முடிவு செய்துகொண் டிருந்தார் தளபதி நைனப்ப சேர்வை! மருது பாண்டியருக்கு ஓர் ஐயம். நைனப்ப சேர்வை அடிக்கடி புலியைப் போல் உறுமுவதைப் பார்த்தால் அவர் புலியைப் பிடிக்கப் போகி றாரா? கொன்று வஞ்சம் தீர்க்கப் போகிறாரா? அப்படியென்றால் துப்பாக்கியின் இரண்டு வெடிகள் போதுமே!

''தளபதி! நீங்கள் துப்பாக்கியை ஏந்திக் கொள்வது நல்லது'' என்றார் மருது பாண் டியர்.

''இல்லை, அரசே! நான் அதனிடம் நேருக்கு நேர் போரிட்டு அதனை அடக்க வேண்டும். நீங்களும் எனக்குள்ள புலிப் போர்ப் பயிற்சி யைத் தெரிந்துகொள்ள வேண்டுமல்லவா?''

''ஓ.... அப்படியா? நல்லது. அப்படியே செய்யலாம்.''

வேட்டைக்குப் புறப்பட்டனர்.

அன்று எப்படியும் புலியை விரட்டி வந்து ஒரு குறிப்பிட்ட திடலண்டை விட வேண்டும் என்பது மருதரசரின் ஆணை! எனவே மலை வாசிகள் பறைகளை அடித்துக்கொண்டு ஐந்து

தோற்றம்
19-12-1923



மறைவு
30-6-1973

எங்களது ஸ்தாபக டைரக்டர்களில் ஒருவரான

## திரு G. V. லட்சுமிநாராயணசாமி நாயுடு

அவர்கள் 30-6-73 சனிக்கிழமை அன்று இரவு 7-25 மணிக்கு காலமானதைக் குறித்து மிகவும் வருந்துகிறோம்.

எங்கள் கம்பெனியின் வளர்ச்சிக்கு அவர் அளித்த உற்சாகமும் ஊக்கமும் அளவற்றது. குடும்பத்தார், உறவினர்கள் மற்றும் நண்பர்கள் துயரில் நாங்கள் பங்கு கொள்கிறோம். அன்னாரது ஆத்மா சாந்தி அடைய பிரார்த்திக்கின்றோம்.

நிர்வாக இயக்குநர்கள், ஊழியர்கள்

## மொபெட்ஸ் இந்தியா லிமிடெட்

திருப்பதி & கோயமுத்தூர்

மற்றும் அவர்களுடைய விற்பனையாளர்களும்
உப உறுப்பு சப்ளை செய்பவர்களும்

கல்லுக்கு ஐந்து கல் தொலைவு சென்று காட்டைச் சுற்றிச் சூழ்ந்து பறையடித்த வண்ணம் துப்பாக்கிக் காவலுடன் சந்துபொந்துகளிலெல்லாம் புகுந்து விரட்டிக் கொண்டு வந்தனர். இடைப்பட்டு மருண்டோடிய மான் இனங்களை அவர்கள் ஒன்றுமே செய்யவில்லை. ஏன்? எந்தச் சிறு மிருகங்களுக்கும் அவர்கள் தொல்லை தரவில்லை.

இப்படி இரண்டு கல் தொலைவு வரையில் அவர்கள் வருகிறபோது—

ஒரு புதரிலிருந்து பாய்ந்தோடிய புலி, குகையை நாடி ஓடியது. விடுவார்களா? பயங்கரச் சத்தம் எழுப்பி அதை ஈட்டிகளாலும், வேல்களாலும் பயமுறுத்தி விரட்டத் தொடங்கினர். குறிப்பிட்ட அந்தத் திடலுக்குப் புலியை விரட்டி வந்து விட்டனர்.

அதுவரையில் தன்னைத் தயார்ப்படுத்திக் கொண்டிருந்த நைனப்ப சேர்வை, வெகுண்டு யாருடைய உத்தரவுக்கும் எதிர்பாராமல் பாய்ந்து விட்டார். கவசம்கூட அணியாத அவருடைய துணிவைக் கண்டு அஞ்சாத நெஞ்சங்களே இல்லை!

பாய்ந்து வந்த நைனப்ப சேர்வை என்கிற பயங்கர வேங்கையின் மீது அதுவரை வழி நெடுகப் பலரால் விரட்டியடிக்கப்பட்டு, சோதனையும் வேதனையுமாக ஓடிவந்த அந்தப் புலி பெருத்த உறுமலுடன் பாய்ந்தது. பார்த்தவர் நெஞ்சம் பதைபதைக்கப் புலி, நைனப்ப சேர்வையைப் புரட்டுவதும், நைனப்ப சேர்வை புலியைப் புரட்டி யடிப்பதுமாகத் துவந்த யுத்தம் நடந்தது. எவ்வளவோ பாடுபட்டுப் புலியை அடக்கி வீழ்த்த முயன்றார் நைனப்ப சேர்வை. தம் இடுப்பிலிருந்த குத்துவாளை எடுத்து அதன் வயிற்றில் பாய்ச்சினார். வலி தாங்காத புலி வானம் கிடுகிடுக்க உறுமி, நைனப்ப சேர்வையைக் கூரிய நகங்களால் பிராண்டியது. பிறகு முன்னங்கால்களில் வலது காலால் ஓங்கி அறைந்தது. நைனப்ப சேர்வையின் நெஞ்சில் பலத்த பிளவு! ஆனாலும் விடாது புலியை மீண்டும் குத்துவாள் கொண்டு மார்பில் தாக்கினார். மண் முழுவதும் இரத்தம் தோய்ந்து காணப்பட்டது. புலியின் மஞ்சள் உடலில் இருந்த கறுப்பு வரிகளுடன் சிவப்பு வரிகள் இடம் பெற்று ஒழுகின. நைனப்ப சேர்வையோ ரத்தத்தில் குளித்தெழுந்தவர் போலக் காணப்பட்டார்.

சற்றைக்கெல்லாம் புலி வீழ்ந்தது.

அதன் பற்களை அசைத்து எடுத்தார் நைனப்ப சேர்வை.

பெருத்த வெற்றியுடன் புலிப் பல்லைக் கொண்டு வந்து மருதரசர் பாதத்தில் வைத்த நைனப்ப சேர்வையைத் தம்மை மறந்து எழுந்து சென்று அணைத்துக் கொண்டார் மருதரசர். அவருடைய உடல் முழுதும் ரத்தக் கறை படிந்ததைக்கூட அவர் பொருட்படுத்தவில்லை. ரத்தக் குளியல் என்பது அக்காலத்துச் சுத்த வீரர்களுக்குச் சொர்க்க நதியில் குளிப்பது போன்றதாயிற்றே!

இப்படி ஏதேனும் அசம்பாவிதம் நிகழும் என்று முன்கூட்டியே எதிர்பார்த்த மருதரசர் தயாராக மருத்துவரை அழைத்து வந்திருந்தார். அடுத்துக் கொஞ்சமும் தாமதியாமல் நைனப்ப சேர்வைக்கு ஏற்பட்டிருந்த காயங்களுக்கான மருந்து போட முனைந்தார்.

வேட்டைப் பயணம் முடிந்தது. அனைவரும் சிவகங்கையை நோக்கிப் புறப்பட்டனர்.

நகரை அடைந்தனர். செய்தி சிவகங்கை முழுவதும் பரவியது. நைனப்ப சேர்வையின் இல்லக் கிழத்தி கண்ணீரும் கம்பலையுமாகக் கணவருடைய பக்கத்தில் அமர்ந்து பணிவிடைகளைக் கவனித்தாள். அவளுக்குச் செய்தி தெரியாது; 'தெரியப் படுத்தித்தான் அழைத்துச் செல்ல முடியுமா? அனுமதிதான் தருவாளா? ஏதோ அரசருடன் கணவர் வேட்டைக்குச் செல்கிறார் என்ற நினைவோடு இருந்துவிட்டாள்.

அரண்மனை மருத்துவர்கள் அனைவரும் ஒன்றுகூடி எத்தனையோ பச்சிலைகளைப் பறித்து வந்து காயங்களை ஆற்ற முனைந்தனர். ஆயினும் காயங்கள் ஆழமாக ஊன்றியிருந்ததால் புரையோடிப் போயின. எத்தனை முயன்றும் புரையை நீக்கிக் காயத்தை ஆற்ற முடியவில்லை. ஒரு தினம் —

சிவகங்கைச் சீமையின் தளபதியாக விளங்கிய நைனப்ப சேர்வை உயிர் நீத்தார். சிவகங்கைக்கு அவருடைய இறப்பு பெருத்த இழப்பாக முடிந்தது. மருது சகோதரர்கள் கண்ணீர்விட்டுக் கதறினார்கள். சிவகங்கை மக்கள் கலங்கி அழுதனர்.

சின்ன மருதுவுக்கு இந்த இழப்பைத் தாங்கவே முடியவில்லை. அண்ணியும் பட்டத்தரசியுமாகிய ராக்காத்தாளிடம் வேதனையுடன் கடிந்து கொண்டார். ஆமாம்; ஆரம்பத்தில் அந்தப் புலியைக் கொண்டு வந்தபோதே ஏதோ ஓர் உற்பாதத்துக்காகத்தான் இப்படியான செயல் நடந்திருக்கிறது என்று அவர் நினைத்தது வீண் போகவில்லை. ஆயிரம் ஆயிரம் வெள்ளைக் கும்பினிக்காரர்களுடைய சிரங்களைச் சீவித் தள்ள வேண்டிய நைனப்ப சேர்வை, ஒரே ஒரு புலியை வீழ்த்தித் தாமும் வீழ்ந்துபட்டார்! தேவைதானா?

மனித உழைப்பும், பலமும் பயன்படத் தக்கவைகளுக்குப் பயன்பட்டால் பரவாயில்லையே! புலியுடனும், புரட்டர்களுடனும் போராடி மாள்வதில் என்ன பயன்?

**''சிவகங்கைத் தூண்களுள் ஒன்று விழுந்துவிட்டது தாங்க முடியாத பேரிழப்பு! வேற்று மண்ணிலிருந்து எலிகள் வந்து சேட்டை செய்யும் இந்த நேரத்தில் நம் மண்ணில் வாழும் புலியை வீழ்த்த வேண்டிய அவசியம் இல்லை. வெள்ளையர்கள் ஓர் அடி அதிகமாக எடுத்து வைத்துவிட்டார்கள் என்பதைத்தான் இது காட்டுகிறது!'' என்று பாஞ்சாலங் குறிச்சியிலிருந்து வீர பாண்டிய கட்டபொம்மன் அனுதாப ஓலை அனுப்பி வைத்திருந்தார்.**

பதினைந்து நாட்களாகியும் மருது பாண்டியர் மனக் கவலையிலிருந்து விடுபட்டார் இல்லை. அவ்வளவு எளிதில் விடுபட்டுவிட முடியுமா?

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031
Managing Editor: T. Sadasivam

# பண்டைய நாகரீகத்தின் மறுமலர்ச்சி

'காஃப்டா' மற்றும் 'துப்பட்டா'களின் பரம்பரை நாகரீக கவர்ச்சிக்கு
புதிய எழிலூட்டுகின்றன மபத்லாலின் 'மெஃப்ரின்' உடுப்புத் துணிகள்.
பாலியெஸ்டர் மற்றும் காட்டன் இழைகலந்த 'மெஃப்ரின்' பண்டைய
கற்பனைகளுக்கு, நவநாகரீக எழிலோடு கூடிய வண்ணம், வடிவம்
மற்றும் நெசவின் நேர்த்தியை இழைத்து, கிளர்ச்சியூட்டும்
மறுமலர்ச்சியை அளிக்கிறது!

**மபத்லால் க்ரூப்** அளிக்கும்
**நேர்த்தியான துணிமணிகள்**



**மெஃப்ரின்**
**பாலியெஸ்டர் சேலைகள் மற்றும் உடுப்புத் துணிகள்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka ஸ்ரீலங்காவில் விலை 45 சதம் (தபால் செலவு தனி)









